உ

# திருக்காட்டுப்பள்ளித் தல வரலாறு.



பங்குனி உத்தரத் திருவிழாக் குழு வெளியீடு.

உ

# திருக்காட்டுப்பள்ளித் தலவரலாறு

தவத்திரு. குன்றக்குடி அடிகளார்
அவர்கள் 22-3-1967 இல்
இந்நூலை வெளியிட்டு வாழ்த்துரை
வழங்கி அருளினார்கள்.



ஆக்கியோர் :
புலவர்மணி, வித்துவான் தி. கி. சுந்தரமூர்த்தி
மதுரை.
வித்துவான், தி. ச. சுப்பிரமணியம்
பசுமலை.



வெளியிட்டோர் :
பங்குனி உத்தரத் திருவிழாக் குழுவினர்
திருக்காட்டுப்பள்ளி.

பதிப்புரிமை ] 1967 [விலை 1 ரூபா

அச்சிட்டோர் : நோபிள் பிரஸ், மதுரை-1, போன் 4587.

# பங்குனி உத்தரத் திருவிழாக் குழுவினர்.

திரு. T. M. தங்கவேலு நாட்டார் அவர்கள், தலைவர்
,, ச. குழந்தைவேலன் ,, செயலாளர்
,, R. N. அருணாசலஞ் செட்டியார் ,,
,, D. இராமையா சோழகர் ,,
,, K. பிச்சையா மங்கலார் ,,
,, கூ. இரத்தினம் செட்டியார் ,,
,, அ. தருமராசு சேதிராயர் ,,
,, சீ. இராசமாணிக்கம் நாயுடு ,,
,, தி. சி. தங்கவேலு பிள்ளை ,,
,, ஜி. சீனிவாசராவ் ,,
,, R. ரெங்கராசு பிள்ளை ,,
,, நா. பாலுசாமி செட்டியார் ,,
,, K. P. அனந்த நாராயண ஐயர் ,,
,, எம். பழநியரசு நாட்டார் ,,
,, இராகதா. கண்ணையன் செட்டியார் ,,
,, S. தண்டாயுதபாணி சென்னண்டார் ,,
,, R. கிருஷ்ணமூர்த்தி ஐயர் ,,
,, சி. குமரசாமி ,,
,, T. சரவணவேலு ,,
,, க. மணி ,,
,, மு. முனுசாமி நாயுடு ,,
,, R. கலியமூர்த்தி ,,

# முன்னுரை

மேலைத்திருக்காட்டுப்பள்ளியில் பிறந்து வளர்ந்து கலை பயின்று வந்த எங்கட்குத் தீயாடியப்பர் திருக்கோயில் வரலாற்றை வெளியிட வேண்டுமென்ற பெரு விருப்பம் பல்லாண்டுகட்கு முன்னரே தோன்றியது. அந்நிலையில் தலவரலாற்றுக்குரிய குறிப்புக்களனைத்தையும் தொகுத்து முறைப்படுத்தி திருவருள் கூட்டுவித்த வண்ணம் இதுபோது தவத்திரு. குன்றக்குடி அடிகளார் அவர்கள் வாழ்த்துடன் வெளியிட வாய்ப்புக் கிடைத்தமைக்குப் பெருமகிழ்ச்சியுறுகின்றோம்! அருள் நெறித் தந்தை அவர்கள் பொன்னார் திருவடிகட்கு வணக்கம்.

இந்நூல் வெளிவரப் பல்லாற்றானும் உதவிய உத்தர விழாக்குழுவின் தலைவரும், ஊராட்சி மன்றத் தலைவருமாகிய திரு. இ. மு. தங்கவேலு நாட்டார், விழாக்குழுவின் செயலரும் ஊராட்சிமன்ற உறுப்பினருமாகிய திரு. ச. குழந்தைவேலன், ஊராட்சி மன்ற உறுப்பினர் திரு. R. N. அருணாசலஞ் செட்டியார், மாலா திரையரங்கு உரிமையாளர் திரு. D. இராமையா சோழகர், முன்னாள் ஊராட்சிமன்றத் தலைவர் திரு. க. பிச்சையா மங்கலார், நாகாச்சி. திரு. க. இராமானுஜ கரம்பியர் அவர்கட்கும், அணிந்துரை வழங்கிய தமிழ்நாடு நாளிதழ் ஆசிரியர் திரு. இ. மாணிக்கவாசகம் B. A., அவர்கட்கும் தலைமையாசிரியர் திரு. P. K. நாராயணன் M.A., B.T., ஐயாற்று அரசர் கல்லூரி முதல்வர் திரு. T.V. கோபாலய்யர் M. A., B. O. L., அவர்கட்கும் எங்கள் நன்றி.

இந்நூலைச் சிறந்த முறையில் வெளியிட உதவிய விழாக்குழுவினருக்கும் பொருளுதவிய அன்பர்கட்கும் எங்கள் நன்றி என்றும் உரியதாகும்.

மதுரை,
15-3-67

தி. கி. சுந்தரமூர்த்தி
தி. ச. சுப்பிரமணியம்

# அணிந்துரை

மதுரை "தமிழ்நாடு" நாளிதழ் ஆசிரியரும், ஆலைஉரிமையாளரும் பலகல்வி நிலையங்களின் தாளாளருமாகிய உயர்திரு.

## கருமுத்து, தி. மாணிக்கவாசகம் பி. ஏ. அவர்கள்

வழங்கியது.

புலவர்மணி, வித்துவான் தி. கி. சுந்தரமூர்த்தி அவர்கள் எங்கள் தியாகராசர் நன்முறை உயர்நிலைப்பள்ளித் தலைமைத் தமிழாசிரியர். அவர் செந்தமிழ்ப் புலமையும் கவியியற்றும் வன்மையும் நாடகங்களை நன்கு இயக்கும் வல்லமையும் ஒருங்கே பெற்றவர். சைவமரபு கெடாமல், தமிழை வளர்க்கும் பேரறிஞர். பசுமலைத் தமிழாசிரியரும் அருள்நெறிச் செயலாளருமாகிய வித்துவான் திரு. தி. ச. சுப்பிரமணியம் அவர்களுடன் இந்நூலை ஆக்கியுள்ளார்.

ஞானசம்பந்தராலும், நாவுக்கரசராலும் பாடப்பெற்றது இவ்வூர். செட்டி நாட்டவர்கள் பாடல்பெற்ற தலங்களையே புதுப்பிப்பார்கள். பாடல் பெற்ற தலம் சிறப்புடையதாகும். அக்கினிக்குச் சாப விமோசனம் தந்த திருத்தலம் இது. ஆற்றுப்படுத்துதல் தான் தலவரலாற்றின் நோக்கமேயாகும். இங்கே அக்கினிக்குப் பாவம் மன்னிக்கப்பட்டதுபோல் எல்லாருடைய பாவமும் தியாடியப்பரைத் தொழுவதால் நீங்கும்.

தமிழ்நாடு வரலாற்றுச் சிறப்புற்றதோடு மட்டுமல்லாமல் கல்வியாலும் பண்பாட்டாலும் உயர்ந்து நின்றது. வடக்கே இமயத்தின் உச்சியில் சிவபெருமான் வீற்றிருந்தாலும், அவர் தென்னாட்டை மறந்தாரில்லை. தமிழகத்தில் தான் முருகனின் திருமணம், அர்ச்சுனன், பாசுபதாஸ்திரம் பெற்றது. இராமனின் பாவம் நீங்கியது எல்லாம் நடந்துள்ளன. நளனுக்குச் சனி விலகியது திருநள்ளாற்றில்தான். இவ்வூரில் நடைபெறுவது பங்குனி உத்தரவிழா. அம்மையப்பரின் திருமணக் காட்சியை இவ்விழாவில் கண்டு மகிழலாம். இம்நூலில் வரலாறு அனைத்தும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. இவர்கள் மேலும் பல தலங்களுக்கும் வரலாறு எழுதி வெளியிட்டால் சமய வளர்ச்சிக்கு உறுதுணையாகும். தீ எவ்வாறு தீயவற்றை அழித்து ஒளி தருகிறதோ அதுபோல், இந்நூல் மும்மலங்களையும் ஒழித்து பக்தி என்னும் ஒளி தந்து, உலகில் அன்பு வாழ்க்கை மலரச் செய்வதாகுக.

மதுரை
18-3-67

தி. மாணிக்கவாசகம்.

# அணிந்துரை.

1. ஆளுடைய பிள்ளை அரசிவர்தம் சொல்லருளால்
பாளைக் கமுகிற் பலாவதனில் — வாளைகள்
துள்ளிவிழ வோங்கும் துகடீர் திருக்காட்டுப்
பள்ளியெனச் சொல்லும் பதி.

2. செஞ்சடையில் தங்குஞ் செழுங்கங்கை யிவ்வூர்வாழ்
அஞ்சுமுகன் தாள்தழுவும் ஆவலினால் — செஞ்சடையின்
தாவிப்பின் காவிரியாய்த் தாங்காது வந்தனளே
பூவிரிக்கும் நல்லாடை போர்த்து.

3. எத்தனையோ கோயில் இருந்துமிவ் வூர்க்கோயில்
அத்தனையும் விஞ்சும் அழகென்ப — சித்தத்தில்
மாணக் கிடக்கின்ற மான்மழுவோன் தீயாடி
காணக் கிடப்பதனைக் கண்டு.

4. ஊரின் பெருமைகளை, உள்ளபல செய்திகளைத்
தேரின் சரித்திரச் செய்திகளை — ஊரின்
தலப்பெருமை சொல்லுந் தனிநூலைக் கண்டு
நலப்பெரு மைகொண்டேன் நான்.

5. சுந்தர மூர்த்திப்பேர் தோன்றலவன் தன்றுணைவன்
முந்துசுப்ர மண்யப்பேர் மூதறிவோன் — தந்தருளும்
சொன்னலஞ் சான்றவத் தூயநூல் எஞ்ஞான்றும்
பன்னலமும் பெற்றுயர்க பார்.

6. தொண்டும் சமுகநலத் தூய்மையுமே நோக்காகக்
கொண்டுபுகழ் கொள்ளக் குறிக்கின்ற — தண்டமிழ்தேர்
அன்பர் இருவருமே ஆன்ற பெருநூல் போல்
என்றும் புகழ்பெருக ஈங்கு.

சர். சிவசாமி ஐயர் உயர்நிலைப்பள்ளி,
திருக்காட்டுப்பள்ளி.

P. K. நாராயணன் M.A.,B.T.,
தலைமையாசிரியர்,
7—8—67.

# அணிந்துரை.

பொன்னிநன் னதியின் இன்னியல் தென்கரை
எஞ்சாத் தொல்சீர்த் தஞ்சைமா வட்டத்து
ஈட்டுறு கவினார் காட்டுப் பள்ளியில்
மறைபயில் கண்டன் இறைவியோ டுறையப்
பண்டையோ ரெடுத்த விண்டொடர் கோயில்
அமைந்துள சிறப்பும் சமைந்துள படிவமும்
நலன்பல வமைந்த தலனுறு பெருமையும்
கோவிலைப் பரவி மேவிய சிறப்புடை
வானவர் முனிவர் ஏனவர் உயர்வும்
நற்றமிழ்ப் பாடல் சொற்றிடும் அடியவர்
இறைவனைப் பரசிய மறைநிகர் பாடலும்
தங்கிய தொல்சீர்ப் பங்குனி யுத்திரம்
ஆறமர் சென்னியற் சாறயற் பெருமையும்
வரலாற் றறிவு நிரலுற வமைய
மல்லர் தமிழ்பயில் கல்லெழுத் துக்களும்
அறங்கா வலர்தம் திறங்கிளர் தொண்டும்
ஊர்தரு சிறப்பும் ஏர்தரு பாங்கரும்
எழிலுறற் கிடனார் தொழில்தழை வனப்பும்
நிரலுற வமைத்துக் கரவிய லின்றி
நன்னூல் வடிவில் துன்னுறச் செய்த
திப்பியப் பத்தியன் சுப்பிர மணியனும்
மந்திரத் தமிழறி சுந்தர மூர்த்தியும்
இன்னபல் பணியில் துன்னியே வாழ
கறையமர் கண்டத் திறைவன்
குறைவறு திருவருள் நிறைவுறு கவ்வே!

அரசர் கல்லூரி,
திருவையாறு,
6—8—67.

T. V. கோபால ஐயர் M. A., B. O. L.,
முதல்வர்.

## தியாகராஜர் அழகமர் நாயகி ஆலய நிர்வாகிகள்.

திரு. எஸ். குருமூர்த்தி அவர்கள் —இறைபணியாளர்
,, ஆர். இராதா கிருட்டிணன் அவர்கள் —எழுத்தர்

### அறங்காவலர்கள்.

திரு. பி. எஸ். இராஜகோபாலய்யர் அவர்கள் —தலைவர்
,, சி. சுந்தரராசு விருதுள்ளார் ,,
,, நா. பாலுசாமி செட்டியார் ,,
,, கே. பி. கிருஷ்ணய்யர் ,,
,, ஒ. எம். அண்ணாமலை ,,

### தண்டாயுதபாணி கோயில் அறங்காவலர்கள்.

திரு. பி. எம். நாச்சியப்ப முதலியார் அவர்கள்—தலைவர்
,, கோ. சபாநாயகம் பிள்ளை ,,
,, தி. சி. ஆறுமுகம் பிள்ளை ,,

### ஆஞ்சநேயர் கோவில் அறங்காவலர்கள்.

திரு. வி. கோவிந்தராவ் அவர்கள் —தலைவர்
,, கே. பீமராவ் ,,

### புதுச்சத்திரம் வேணுகோபால சுவாமி கோயில் பரம்பரை அறங்காவலர் குழுத்தலைவராக

திரு. ஆர். வி. கோதண்டராம நாயுடு அவர்களும் பிறரும் இருந்து நற்பணியாற்றி வருகின்றனர்கள்.

---

# பொருளடக்கம்.




கோயிலில் உள்ள நடராசர் திருவுருவம்.



தண்டாயுதபாணி கோயில் சந்நிதி.

உ

திருச்சிற்றம்பலம்

# திருக்காட்டுப்பள்ளித் தல வரலாறு.

நிருத்தனர் நீள்சடை மதியொடு பாம்பணி
கருத்தனர் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
அருத்தனர் அழகமர் மங்கையோர் பாகமாப்
பொருத்தனர் கழலிணை போற்றுதல் பொருளதே.
—திருஞானசம்பந்தர்

மாட்டைத் தேடி மகிழ்ந்துநீர் நும்முளே
நாட்டுப் பொய்யெலாம் பேசிடும் நாணிலீர்
கூட்டை விட்டுயிர் போவதன் முன்னமே
காட்டுப் பள்ளியு ளான்கழல் சேர்மினே.
—திருநாவுக்கரசர்.

## 1. தலமும் இருப்பிடமும்

"பூந்தண் பொன்னி எந்நாளும் பொய்யாதளிக்கும் புனல்நாடு" என்று தெய்வப்புலவர் சேக்கிழார் பெருமானால் போற்றப்பட்ட சோழ வள நாட்டில் தஞ்சாவூர் மாவட்டத்தில் காவிரி ஆற்றின் தென்கரையில் அமைந்த ஊர் திருக்காட்டுப்பள்ளியாகும். "கற்றவர்கள் கருதும் காட்டுப்பள்ளி" என்று திருஞான சம்பந்தரால் புகழப்பெற்ற இதனை மேலைத்

திருக்காட்டுப்பள்ளி என ஆன்ருேர் கூறுவர். திருக்காட்டுப்பள்ளி என்னும் பெயருடன் சோழநாட்டில் இரண்டு சைவத் திருப்பதிகள் இருக்கின்றன. இவை இருக்கும் திசைகொண்டு கீழைத் திருக்காட்டுப்பள்ளி எனவும் மேலைத் திருக்காட்டுப்பள்ளி எனவும் வழங்குகின்றன.

கீழைத் திருக்காட்டுப்பள்ளி சீகாழிக்குத் தென்கிழக்கிலே காவிரிப்பூம் பட்டினத்திற்குச் செல்லும் வழியில் திருவெண்காட்டிற்கு அருகில் 2 கி. மீ. தூரத்தில் உள்ளது. இது ஆரணியேசுரர் கோயில் என வழங்குகிறது. மேற்குப் பார்த்த சந்நிதி. இறைவன்-ஆரணிய சுந்தரேசுவரர், இறைவி-அகிலாண்ட நாயகி. திருஞான சம்பந்தர் இவ்வூரைப் பாடியிருக்கிருர்

மேலைத் திருக்காட்டுப்பள்ளியாகிய இவ்வூர் மிகப் பழைய சிவத்தலங்களுள் ஒன்று. 1 திருஞானசம்பந்தர் திருநாவுக்கரசர் இருவரும் இதனைப் பாடியுள்ளனர். செந்நெல் வளமும், முக்கனிச் செழிப்பும், கரும்பு, தெங்கு முதலியன நிறைந்த பொழில் வனப்பும் மிகுந்த ஊர். இவ்வூர் தஞ்சாவூருக்கு வடமேற்கே 20 கி. மீ. தொலைவில் உள்ளது. திருச்சி தஞ்சாவூர் இடையில் உள்ள பூதலூர் இரயில்வே நிலையத்திலிருந்து வடக்கே 8 கி. மீ. தூரத்திலும் உள்ளது. தஞ்சாவூரிலிருந்து கண்டியூர் வழியாகவும், கந்தர்வகோட்டையிலிருந்து பூதலூர் வழியாகவும், திருவையாற்றிலிருந்து சாத்தனூர்

---

1 சோழ நாட்டில் பாடல் பெற்ற சிவத்தலங்கள் 190,
காவிரியின் வடகரையில் உள்ளவை 63,
தென் கரையில் உள்ளவை 127.

வழியாகவும், நடுக்காவேரி வழியாகவும், கல்லணையி லிருந்து கோவிலடி வழியாகவும் இவ்வூரை அடைய கார் வசதிகள் உள்ளன. ஊரில் நல்ல உணவு விடுதி களும், தங்கும் விடுதிகளும் இருக்கின்றன. இவ்வூரில் தான் காவிரியினின்றும் குடமுருட்டியாறு பிரிந்து செல்கின்றது. காவிரியைக் கடந்து வடபால் செல்ல நல்ல பாலம் உள்ளது. இவ்வூரை அடைந்ததும் கோயில் கோபுரமும். சர். பி. எஸ். சிவசாமி ஐயர் உயர்நிலைப் பள்ளிக் கட்டடங்களும் வருகின்றவர்களை வரவேற்பது போல் தோன்றும். இக்கோயில் இந்துமத அறநிலையப் பாதுகாப்பின் ஆதரவில் நன்றாக நடை பெற்று வருகிறது.

## 2. வரலாறு

தமிழ்நாட்டில் பள்ளி என்று பெயர் கொண்ட பல சிவத்தலங்கள் உள்ளன. அவை திருச்சிராப்பள்ளி, திருச்செம்பொன்பள்ளி, திருநனிபள்ளி, கீழைத்திருக் காட்டுப்பள்ளி, திருச்சக்கரப்பள்ளி, திருமயேந்திரப் பள்ளி, திருஅகத்தியான்பள்ளி முதலியன. அவைபோல, இத்தலமும் மேலைத்திருக்காட்டுப்பள்ளி எனப் பெயர் பெற்றது. இதனால் பண்டைக்காலத்து இத்தலங்கள் இறைவன் இருக்கைக்குரிய சிறந்த தலங்களாக விளங்கின என்று அறியலாம். பள்ளி என்பது பல பொருள் குறித்த ஒரு சொல்லாயினும் ஈண்டு பள்ளி என்பது இறைவன் தங்கியிருக்கும் இடத்தைக் குறிக் கும். பொதுவாக இறைவன் எத்தலத்துள்ளும் கோயில் கொண்டிருந்தாலும் சிறப்பாக மேற்குறித்த தலங்களில் கோயில் கொண்டிருப்பதை இதனால் அறியலாம். இவ்வூரில் உள்ள கோட்டை 1771 இல் ஆங்கிலேயரால்

பிடிக்கப்பட்டது. 1781இல் இது ஐதர் அலி வயப்பட்டது. இப்போது பாழடைந்த நிலையில் சில பகுதிகள் மட்டும் இருக்கின்றன. இவ்வூரிலிருந்து 5 கி. மீ. தொலைவில் சாஸ்தா கோயில் ஒன்று இருக்கிறது. சமணர் வழிபட்ட பள்ளி ஒன்று பண்டு இருந்தமையால் பள்ளி என்ற ஈற்றுச் சொல் இவ்வூரின் பெயரில் இடம் பெற்றிருக்கக் கூடும்.

பள்ளிகளின் சிறப்பை-பொது அடைவு திருத் தாண்டகத்தில், திருநாவுக்கரசு சுவாமிகள் :-

பொருப்பள்ளி வரைவில்லாப் புரமூன் றெய்து
புலந்தழியச் சலந்தரனைப் பிளந்தான் பொற்சக்
கரப்பள்ளி திருக்காட்டுப் பள்ளி கள்ளார்
கமழ்கொல்லி யறைப்பள்ளி கலவஞ் சாரற்
சிரப்பள்ளி சிவப்பள்ளி செம்பொன் பள்ளி
செழுநனிப் பள்ளிதவப் பள்ளி சீரார்
பரப்பள்ளி யென்றென்று பகர்வோ ரெல்லாம்
பரலோகத் தினிதாகப் பாலிப் பாரே.

என்று புகழ்ந்து பாடியுள்ளார்கள்.

இத்திருக்காட்டுப்பள்ளியில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும்

சுவாமியின் பெயர்:- **தீயாடியப்பர்** (அக்னீஸ்வரர்)

அம்மையின் பெயர் :- **அழகமர் நாயகி** (சௌந்தரநாயகி)

தீர்த்தம் :- **அக்னி தீர்த்தம், காவிரி தீர்த்தம்**

தலமரம் :- **வன்னி, வில்வம்.**

## 3. கோயில் அமைப்பும் ஊரமைப்பும்

தஞ்சைப் பெரிய கோயில் எவ்வாறு வீதிகளுக்குத் தென்மேற்கில் அமைக்கப்பட்டிருக்கிறதோ அம்முறையில் இக் கோயிலும் ஊரின் நான்கு பெரிய தெருக்களுக்குத் தென் மேற்கே அமைக்கப்பட்டிருக்கிறது. மேல வீதியும், தெற்கு வீதியும் கூடுமிடத்தில் முதற் கோபுரம் காட்சியளிக்கிறது. சுற்றிலும் பெரு மதில்கள் உள்ளன. ஒரு காலத்தில் இவ்வூர் கோட்டையாக இருந்தது. இவ்வூரை உள்ளடக்கிச் சுற்றிலும் நான்கு பெரிய மதில்கள் இருந்தன. இம் மதில்களால் சூழப்பட்ட கோட்டையின் வாயிற்படி, இன்றுள்ள கோட்டை விநாயகர் கோயிலின் பக்கத்தில் இருந்தது. அவ்வாயிற்படியில் ஒரு பெரிய கதவும், அதில் ஒரு சிறு சாளரமும் அமைத்திருந்தனர். இரவு நேரத்தில் மூடித் தாளிட்டுப் பூட்டிவிடுவதும் வைகறையில் திறந்து விடுவதும் வழக்கமாக இருந்து வந்திருக்கிறது. இதற்குச் சான்றாக இன்றும் இவ்வூரை இங்குள்ள மக்கள் "கோட்டை" என்று அழைக்கும் வழக்காறும் இருந்து வருகிறது.

கோட்டை இருந்த அடிப்படை இடங்களை இன்றும் காணலாம். மற்றும் கோட்டையின் உயர்ந்த மதில்கள் கோயிலிலுள்ள மதில்களை ஒட்டியே இருப்பதைக் காணலாம். இவ்வூர் ஒரு காலத்தில நல்ல பாதுகாவலான இடமாக இருந்ததென்பதை இம்மதில்களே அறிவுறுத்துகின்றன. இதோ கோயிலுக்கு வந்துவிட்டோம்.

முதற் கோபுர வாயில்வழி உள் நுழைவோம். முதலில் விநாயகர், கொடிமரம், பலிபீடம், ஸ்ரீதர்ம நந்தி இவை நம் கண்முன் தோன்றும். உள்ளே சென்றால்

இறைவன் சந்நிதி கிழக்கு நோக்கியும், அம்மன் சந்நிதி முதற் பிரகாரத்தின் முன் பக்கத்தில் தெற்கு நோக்கியும் இருப்பதைக் காணலாம். அம்மன் சந்நிதிக்கு எதிரே வடக்கு முகமாய்த் திரும்பிய நர்த்தன விநாயகர் உருவம் இருக்கிறது.

பின்பு, இரண்டாவது கோபுரம், உள்ளே மண்டபம், வலதுபுறம் நடராசர் சபா மண்டபம், மண்டபத்தின் கீழ்ப்புற மேடையில் கிழக்கிலிருந்து மேற்கு நோக்கிய வகையில் பைரவர், மூவர் (திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர்) லிங்கோற்பவமூர்த்தி சூரியன் முதலியவர்களின் சிலைகள். இம்மண்டபத்தின் மேல்புறம் நவக்கிரகங்கள், இதைக் கடந்து உள்ளே சென்றால் மகாமண்டபம், அர்த்தமண்டபம், கர்ப்பக்கிரகம் இவைகளைக் காணலாம். கர்ப்பக்கிரகம் சுமார் 6 அடி ஆழத்திலும் மகாமண்டபம் சுமார் 10 அடி உயரத்திலும் உள்ளன. சுமார் எண்பது ஆண்டுகளுக்கு முன்பு திருப்பணி செய்ய முற்பட்ட ஓர் அன்பர் மகாமண்டபத்தை உயர்த்தி வைத்தபடி அரைகுறையாய் விட்டு விட்டார். அப்போதிருந்த அறநிலையப் பார்வையாளரும், கிராமத்தாரும் கர்ப்பகிரகத்தைக் கீழிருந்தபடியே வைத்து, திருப்பணி முடித்துச் சிறப்பித்ததாகச் செய்தி வழங்குகிறது. சுவாமி இருக்கும் இடம் பள்ளத்தில் அமைந்திருக்கிறது.

மகாமண்டபத்தில் விக்கிரகங்கள் அனைத்தும் வைக்கப்பட்டிருக்கின்றன. இம்மண்டபத்தை உள்ளடக்கி உட்பிரகாரம் அமைந்திருக்கிறது. இங்கு ஆலமர் கடவுளின் (தெட்சணாமூர்த்தி) அழகிய உருவம்

உள்ளது. உட்பிரகாரம் கருங்கல்லால் ஒட்டப்பெற்றுள்ளது.

சபா மண்டபத்தை உள்ளடக்கிய இரண்டாவது பிரகாரத்தில் சுற்றிலும் பரிவார மூர்த்தங்களுக்காக மாடப்பத்திகள் அமைக்கப்பட்டுள்ளன. அப்பத்திகளில் முறையே வலம்புரி விநாயகர், திருமால், இலக்குமி, இலிங்கோத்பவர், உண்ணுமுலையாள், வள்ளி தெய்வானை முருகன், சிவலிங்கம், ஏகாம்பரர் காமாட்சி, கஜலட்சுமி, விசுவநாதர் விசாலாட்சி, அகோர வீரபத்திரர், துர்க்கை, சண்டிகேசுவரர் முதலியவர்கட்குரிய உருவச்சிலைகள் அழகுமிக விளங்குகின்றன. இங்கே தான் தீர்த்தக்கிணறு ஒன்று இருக்கிறது.

இம் மண்டபத்தைத் தாண்டி வெளியே வந்தால் மூன்ருவது பிரகாரத்தைக் காணலாம். இங்கு அம்மன் கோயில் அமைந்துள்ளது. திருவிழாக் காலங்களில் சுவாமி சுற்றிவரும் பிரகாரம் இதுவே. யாகசாலை இங்கு இருக்கிறது. இதன் வெளியே ஊரின் நான்கு வீதிகளும் உள்ளன. நான்கு வீதிகளையும் சூழ்ந்து கோட்டைச் சுவர்கள் இருந்தன. கோட்டைக்குள் நுழைய மூன்று நான்கு வாயில்கள் அமைந்திருந்தனவாகத் தெரிகிறது. கோட்டையின் வடக்கு வாயிலில் முனியாண்டவர் கோயிலும், கீழ வாயிலில் வரத விநாயகர், அனுமான் கோயில்களும் இப்போதும் உள்ளன. ஏனைய இரண்டு வாயில்கள் எங்கிருந்தன என்பதை இப்பொழுது அறிய இயலவில்லை.

## 4. மூர்த்தி, தீர்த்தம், வழிபட்டோர்

**இறைவனது திருப்பெயர்கள் :** தீயாடியப்பர், அழலாடியப்பர், அக்னீஸ்வரர், வன்னிவனநாதர்.

**அம்மையின் திருப்பெயர்கள்:** அழகமர்நாயகி, சௌந்தரநாயகி. மற்றும் நின்றநிலை விநாயகர், ஆல்மர்க் கடவுளாகிய தட்சிணாமூர்த்தி, பைரவர், முருகன், வள்ளி, தெய்வானை, சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், தண்டியடிகள், பகீரதன் முதலிய மூர்த்தங்களும் உள்ளன.

இத்தலத்திற்குப் பஞ்சபூதங்களில் (நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம்) ஒன்றாகிய அழற்கடவுளால் அமைக்கப்பெற்ற தீர்த்தக்குளம் ஒன்றுண்டு. அதனை அக்னிதீர்த்தக்குளம் என்பர். பின்னர் அக்குளம் எக்காரணத்தாலோ முதலைக்குளம் என்று அழைக்கப் பட்டது. சுவாமி புறப்பட்டு வந்து தீர்த்தம் கொடுப்பது இக்குளத்தில் நடைபெற்று வந்தது. இது தவிர காவிரி யாற்றிலும் சுவாமிதீர்த்தம் கொடுப்பது உண்டு. அக்னிதீர்த்தக்குளம் பழுதடைந்து நீர் தூய்மைகெட்டுப் போனதால் இதனைத் தூர்த்துவிட்டனர்.

ஆனால், அதன் வடகிழக்கு மூலையில் இன்று அதன் நினைவாகத் தீர்த்தக் கிணறு ஒன்று அமைத்துள்ளனர். பெருமை நிறைந்த தீர்த்தம் ஆதலால் இக்கிணறு அமைக்க முயற்சித்தவர்கள் பெரிதும் பாராட்டுதற்குரிய வர்களாவார்கள். அக்னி தீர்த்தக்குளம் இருந்த இடத் தில் நகரப் பஞ்சாயத்தார் அழகிய பேருந்து நிலைய மொன்று அமைத்துள்ளனர். இதனைப் பற்றிய விவரம்

இந்நூலின் மற்ருேர் இடத்தில் உள்ளது. இத்தலத்தில் வழிபட்டுப் பேறு பெறறவர்கள் திருமால், பிரமன். சூரியன், அக்கினி, பகீரதன், உறையூர்ச்சோழனின் மூத்த மனைவி முதலியோர் ஆவர்.

## 5. புராண வரலாறு

ஒரு சமயம் இந்திரன் முதலிய தேவர்கள் இத்தலத்திற்கு வந்து தீயாடியப்பரையும் அழகமர் மங்கையையும் வணங்கிக் களிப்புற்றிருந்தனர். அப்போது அத்தேவர்களுக்கு முகம்போல் விளங்கிய அழற்கடவுள் "நாமோ ஐம்பூதங்களில் ஒன்ருவோம், கடவுளர்க்கெல்லாம் முகமாக விளங்குவோம். பல குணங்களும் அமைந்தோம். நாம் தொட்ட பொருள்கள் யாவையும் சுட்டெரித்து விடுதலால் பழிச்சொல்லும் பாவமும் நமக்கிருக்கின்றன. அதனல் இத்தலத்தில் உள்ள இறைவனை வழிபட்டு உய்வோம்" எனக் கருதி கோயில் உட்புகுந்து பூசை பல புரிந்து வழிபட்டான்.

அப்போது அழலவனுக்கு முன் எம்பெருமான் தோன்றி, "அழலவனே! நீ எண்ணியதை எய்தவேண்டுமானல் நமக்குக் கிழக்கே ஒரு திருக்குளம் அமைத்து உன் பெயரை அதற்கிட்டு அந்நீரைக் கொண்டு நம்மை நீராட்டி வழிபடுவாயாக! அப்போது நின் எண்ணம் கைகூடும்" என்றருளினர். உடனே அழலவன், கோயிலுக்குக் கீழ்த்திசையில் திருக்குளம் எடுத்தான். அக்கினிக்குளம் என்று அதற்குப் பெயரிட்டு, வழிபட்டான். அக்கினியின் வழிபாட்டிற்கிரங்கி இறைவன் மறுபடியும் தோன்றி "நீ வேண்டும் வரம் யாது?" எனக் கேட்டருளினர், அப்போது அழல்வன் "ஐயனே! இக்

குளத்தில் நீராடி உன்னை வழிபடுவோர்களின் பாவங்களைப் போக்கி அருளல் வேண்டும். யான் சுடுதலால் உண்டான பாவம் என்னைவிட்டு விலகித் தூயனாக வேண்டும். இறைவா! நின் பொருள்களை வவ்விய கொடியவர்கள் தங்குலத்தோடு நாசம் அடைந்து நரகிற் செல்லுதல் வேண்டும். நின்னை நினையாது எவர் எச் செயல் செய்தாலும் அது முற்றுப் பெறாது ஒழிதல் வேண்டும். இத்தலத்தில் வந்து நின்னை வழிபட்டு இறப்பவர்க்கு உம் திருவடியை அடையும் பேறு அருள வேண்டும்" என வேண்டினான். இறைவனும் அவ்வாறே அருளினார். அதுமுதல் அழலவன் பாவம் நீங்கப் பெற்றான். இத்தலம் அக்னீச்சுரமெனவும், குளம் அக்கினிக்குளம் எனவும் பெயர்கள் பெற்றன. இறைவனுக்கும் அக்கினீச்சுரன் எனவும் பெயர் உண்டாயிற்று.

" அக்கினியீச் சுரமென்றோர் பெயர்பெற்ற தக்கோயில்
அக்கினியீச் சுரனென்றோர் பெயர்பெற்றார் அங்கணனும்
அக்கினிமா தீர்த்தமென்றோர் பெயர்பெற்ற தத்தீர்த்தம்
அக்கினிய தெனப்புனைவார்க் கதிவிருப்பம் அத்தலமே "

[1] என்ற பாடலால் இதனை உணரலாம்.

இக்குளத்தில் கார்த்திகைத் திங்கள் ஞாயிற்றுக் கிழமையிலும், மாசித்திங்கள் மகநாளிலும், பங்குனி உத்தரத்திலும், வைகாசி முழுநிலா நாளிலும் நீராடி, இறைவனை வழிபாடு செய்பவர்கள் எல்லாச் செல்வமும் பெறுவர். இன்னும் இதில் நீராடி சிவனடியார்களுக்குப் பொருளீந்து வழிபடின் குற்றமெலாம் தீர்ந்து மண்ணில் நல்ல வண்ணம் வாழ்வர்.

1. சிவத்தல மஞ்சரி.

உறையூர் நந்தவனத்தில் திருடிய செவ்வந்தி மலரை அரசன் தன் மனைவிகளுக்குக் கொடுப்ப, அவர்களில் மூத்த மனைவி மட்டும் அதை அரண்மனையிலிருந்த சிவபெருமானுக்கு அணிந்து வந்தாள். உறையூரில் மண்மாரி பெய்ய, மூத்தாள் மாத்திரம் அதற்குத் தப்பி, மேலைத்திருக்காட்டுப்பள்ளி என்னும் இத்தலத்திற்கு வந்தாள். அவளுக்காக இரங்கி இறைவன் கானல் வெப்பம் தணித்தருளினார் என்று[1] வரலாறு ஒன்று கூறுகிறது. ஆண்டவனை மலரால் வழிபடுவார் அடையும் பயனும் இதனால் குறிக்கப்படுகிறது,

## 6. *திருவிழாக்கள் — உத்தரவிழா*

இத்தலத்தில் முறைப்படி நான்கு காலம் பூசைகள் கள் நடைபெறுகின்றன. காலை, உச்சி, மாலை, அர்த்த யாமம்.

கோயிலில் நடைபெறும் விழாக்களில் மிகச்சிறந்தது பங்குனி உத்தரத் திருவிழாவாகும். பங்குனித்திங்கள் வளர்பிறையில் கொடியேற்றப்பெற்று 10 நாட்களுக்குத் திருவிழா நடைபெறுகின்றது. ஒவ்வொரு விழாவையும் அதற்கென்று ஏற்படுத்தப் பெற்றுள்ள சிவநேயச் செல்வர்கள் சிறப்பாக நடத்தி வருகின்றார்கள். விழா நாட்களில் காலை மாலை இருவேளையும் அம்மையப்பர் வீதி உலா வருவதுண்டு. திருவிழா முடிவில் முழுமதி நாளில் (பௌர்ணமி) காவிரியாற்றில் அமைக்கப்பெற்றுள்ள அழகிய பந்தலில் அம்மையப்பர் தங்கியிருந்து காட்சி தந்தருளும் மாட்சி கண்கொள்ளாக் காட்சியாகும், மனிதப்பிறவி பெற்றதன் நோக்

1. உறையூர்ப் புராணம்.

கத்தை அன்று பலர் உணர்வார்கள். பிறசமயத்தவரும் பங்கு பெற்று அந்த விழாவில் கலந்து மகிழ் வார் என்றால் விழாப் பெருமையை அதிகம் கூறவேண் டியதில்லை. இரவு முழுதும் காவிரியாற்று மணலில் அமைக்கப்பட்ட அழகிய பந்தலில் சுவாமி தங்கியிருக் கும் காலத்தில் தமிழகத்தில் சிறப்புற்ற நாகசுரக் கச்சேரி யும், இன்னிசைக் கச்சேரியும் அங்கு நடைபெறும்.

**உத்தரத் திருவிழாச் சிறப்பு**

பெரும்பாலும் நிறைமதியை ஒட்டியே தமிழர்க ளுடைய திருவிழாக்கள் அமைந்திருக்கும். இயற்கை எழில் நிறைமதி நாட்களில் நன்கு விளங்கும். பால் நிலாவின்பம் பாருக்கெல்லாம் மகிழ்ச்சி ஊட்டும். வாடைக் காற்றும், வருத்தும் குளிரும்பனியும் நீங்கி வசந்த காலம் அரும்பும் திங்கள் பங்குனியே யாகும். இலை உதிர்ந்து பட்டன போலுள்ள மரஞ்செடி முதலி யன புதுத்தளிர் கொண்டு பூத்துக்குலுங்கும் மாதம் இப் பங்குனியே. தென்திசைக் கோடியில் சென்ற சூரி யன் வடதிசை நோக்கி வரும் மாதம் ( மார்ச்சு 21 ) இப்பங்குனியே. வசந்தத்தை எதிர்நோக்கும் இம் மாதத்தைப் "பங்குனிப் பருவம்" என்பர் சீவகசிந்தா மணி ஆசிரியர் திருத்தக்கதேவர். (பாடல் 851)

கார்காலம் தொடங்கி வயலில் உழைத்த உழவன், பின் பனிக்காலம் முடிவதற்கு முன் அவ்வயற் பயனைப் பெற்று மகிழ்வான். அடுத்துச் சில திங்கள் அவனுக்கு ஓய்வு கிடைக்கும். தமிழநன் பெரும்பாலோர் உழவர் களே யாவர். உழவர் விளைபயனைக் கொண்டு தாமும்

மகிழ்வர், சுற்றமும் பேணுவர். பயனுறு விழாவாற்றிச் சிறப்புறுவர். அவ்விழாக்களின் தொடக்க நாளே உத்தர நன்னாளாகும்.

தமிழ் மக்கள் தெய்வ நம்பிக்கை மிக்கவர்கள்; தம் செயலையெல்லாம் கடவுள் மேல் ஏற்றி மகிழ்ச்சியடைபவர்கள். கடவுளும் நம்போல வாழ்கின்றான் என்று இலக்கியம் இயற்றிப் போற்றுபவர்கள். இறைவனைச் சிக்கெனப் பிடித்து இன்பம் துய்ப்பவர்கள், எனவே தான், தாம் இளவேனிற் பருவத்தே பெற்ற இன்பச் சிறப்பினை இறைவன் மேலேற்றிப் போற்றினர். இறைவன் இறைவியை மணம் செய்து கொள்ளும் சிறந்த நாளாக இப்பங்குனி உத்தரநாளை அமைத்தனர். இறைவன் தனிமை நீங்கிச் சத்தியொடு இருப்பின் உலகில் அன்பு வாழ்க்கை சிறப்பாக அமையும் என்பதைக் கண்டார்கள். எனவேதான் உத்தரத் திருவிழா திருமண விழாவாயிற்று, அத் திருமணக் காட்சியே திருக் கயிலாயக் காட்சியாகும். திருநாவுக்கரசர் ஐயாற்றில் கண்ட கயிலைக் காட்சியும் அம்மை அப்பர் காட்சியே.

சிவபெருமான் பார்வதியைத் திருமணம் செய்வதற்குப் பங்குனி உத்தரமே சிறந்த நாள் எனக்கொண்டார்.

ஆதியின் உலகமெல்லாம் அளித்திடும் அன்னைதன்னைக்
காதலின் வதுவைசெய்யக் கருதினை; கணிதநூலோர்
ஓதுபங்குனியின் திங்கள் உத்தரம் இன்றேயாகும்
ஈதுநன் முகூர்த்தம் எந்தாய் இமயமேல் வருதிஎன்றான்.

(கந்தபுராணம் வரைப் 35)

என்று கச்சியப்பர் இந்நாளைச் சிறப்பித்துள்ளார்.

பார்வதியின் தந்தையாகிய இமவான் வேண்டு கோளின்படி சிவபெருமான் பங்குனி உத்தர நாளில் இமயமலை சென்று திருமணம் செய்துகொள்கிறார். இறைவன் திருமணம் செய்துகொண்டபின் உலகம் இருமை நீங்கி ஒருமை யுற்றது. துன்பம் நீங்கி இன்பம் கொழித்தது. அன்பு பொங்கி அறம் வளர்ந்தது. விழா வின் நோக்கம் இவைதானே. அந்த நோக்கங்களை இறைவன் இறைவியோடு கலந்து இப்பங்குனி உத்தர நாளில் உலகிற்கு ஈந்தான்.

உத்தரவிழா காஞ்சிபுரத்திலும், கபாலீச்சரத்திலும் ஆண்டுதோறும் சிறப்பாக நடைபெறுகிறது. மயிலாப் பூரில் எலும்பைப் பூம்பாவையாக ஆக்கப்பாடும்போது, திருஞான சம்பந்தர் – இன்னின்ன விழாக்களைக் காணா மல் போகின்றாயே எனப் பாடியுள்ளார். அவற்றுள் ஒன்று பங்குனி உத்தர விழா.

"பலிவிழாப் பாடல்செய் பங்குனி உத்தரநாள்
ஒலிவிழாக் காணாதே போதியோ பூம்பாவாய்!"

என்பது அத்தேவாரம். இத்தகைய விழாவால் நாடு செழிக்கும். பசியும் பிணியும் பகையும் நீங்கும். மக்கள் ஒன்றுபட்டு இன்புற்று வாழ்வர். பங்குனி மாதம், மாதங் களில் பன்னிரண்டாவதாகும். உத்தர நட்சத்திரம், நட்சத்திரங்களில் பன்னிரண்டாவதாகும். இரண்டும் ஒன்றுசேரும் நாளே நிறைமதி நாள்; உத்தரநாள்; திரு விழாத் திருநாள்.

இத்தகைய உத்தர விழாவை இவ்வூரில் கண்டு மகிழப் பல்லாயிரக் கணக்கான மக்கள் கூடுவர். செவிக் கின்பம் பெற்று, சிந்தை குளிர்வர். மறுநாள் காலை

வாணவேடிக்கையும் நிகழும். அதன்பின் சுவாமி பல் வகைச் சிறப்புக்களுடன் புறப்பட்டு, கோயிலுக்கு அம்மையாருடன் வந்து சேர்வார்.

உத்தரத்தன்று காலை கோயிலில் இருந்து சுவாமி புறப்பட்டு நான்கு வீதிகளில் காட்சிதருவதுடன், அன்று ஒன்பத்து வேலிக்கும் சென்று ஆங்காங்கு அன்பர்கள் அமைத்துள்ள மண்டகப்படியை ஏற்று, அருள்புரிந்து காவிரியாற்றிற்கு வந்து சேர்வது குறிப்பிடத்தக்கது. அதுபோது தேவார இன்னிசைக் குழுவினரும் சுவாமி யுடன் பண் ஒன்ற இசைபாடி வருவர்.

உத்தரவிழாவை ஆண்டுதோறும் சிறப்புற நடத்த, திருவிழாக்குழு (உத்ஸவக் கமிட்டி) ஒன்று பேரன்பர் களின் முயற்சியால் பல ஆண்டுகளாகச் சிறந்த முறை யில் பணியாற்றி வருகிறது. திருவிழாக் குழுவினர் விவரப் பட்டியல் பிறிதோரிடத்தில் உள்ளது.

## *7. சுவாமி வெளியூர் சென்று வரும்விழா*

மாசித் திங்கள் மகத்தன்று சுவாமி இவ்வூருக்கு வடக்கே 3 கி. மீ. தொலைவிலுள்ள நாகாச்சி என்னும் கிராமத்திற்குச் சென்று, இதற்கென இவ்வூர் ஐயனார் கோயில் திடலில் ஊராரால் நல்லமுறையில் அமைக்கப் பட்டுள்ள மண்டபத்தில் இரவு முழுதும் தங்கியிருந்து மறுநாள் கோயிலுக்கு வரும் வழக்கம் உண்டு.

நாகர் என்ற சிற்றரசன் கொள்ளிடத்தின் ஓடத் துறையை ஆட்சி செய்து வந்ததாகவும் அதனால் இவ் வூர் நாகர்+ஆட்சி நாகாச்சி என்று பெயர் மருவியதாக

வும் கூறப்படுகிறது. அப் பகுதி மக்கள் அழகாம்பிகை அம்மனின் சிலை செய்து கோயிலுக்கு வழங்கினார்களாம். அதனால் அவ்வூர், அம்மனின் பிறந்த இடமாகக் கொண்டாடப்படுகிறது. சீர்முறையோடு பெண்ணை அனுப்புவதான கோட்பாடுகளுடன் சீதனப் பொருள்களும் அனுப்பிவைக்கப்படுகின்றன.

கிராமத்தார்களின் பெருமுயற்சியினால் மண்டபத்தின்முன் பந்தலமைக்கப்பட்டு சுவாமியை அலங்கரித்து தங்க வைக்கிறார்கள். அன்றிரவு அங்கு சமய சம்பந்தமான சொற்பொழிவு, இன்னிசை, நாடகம் முதலியன நடப்பதுண்டு. ஆண்டவன் சிற்றூர்களுக்கும் எழுந்தருளி திருவருள் பாலிக்கும் தன்மையை இவ்விழா இனிது புலப்படுத்துகின்றது. விடியற்காலையில் வாண வேடிக்கைக் காட்சி நடைபெறும்.

மறுநாள் காலை திருக்காட்டுப் பள்ளிக்குத் திரும்பும் போது சுவாமிக்குக் கட்டமுது கட்டி அனுப்பும் வழக்கம் இன்றும் இவ்வூர் மக்களிடம் இருந்து வருவது குறிப்பிடததக்கது. நாகாச்சியில் திருஞான சம்பந்த சுவாமிகள் திருமடமும், அலமேலுபுரம் பூண்டியில் இராமனுஜர் திருமடமும் உள்ளன. அங்கும் சமயத் தொண்டுகள் நன்முறையில் நடைபெற்று வருகின்றன. கிராமப் பொதுமக்கள் இத்தகு தொண்டில் ஊக்கங்காட்டி உழைத்து வருவது பெரிதும் போற்றுதற்குரிய நற்செயலாகும்.

## 8. திருநாவுக்கரசர் தேவாரப் பாடசாலை

கடைவீதியின் நடுவில், இன்றுள்ள கோட்டை விநாயகர் கோயிலுக்குத் தெற்கிலும், அனுமார் கோயிலுக்குக் கிழக்கிலும் இப்பாடசாலை இருக்கிறது. சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்நிறுவப்பெற்ற இத்தேவாரப் பாடசாலை சிறந்த முறையில் நடைபெற்று வந்தது. இங்குள்ள திருநாவுக்கரசரின் திருவுருவப் படம் காண்பார் கருத்தையும் கண்ணையும் ஈர்க்கவல்லது. அழகிய திருமேனி; கருணை ததும்பும் எழில்முகம்; கையில் உழவாரப்படை,

" இடையறுப் போன்பும் மழைவாரும்
இணைவிழியும் உழவா ரத்திண்
படையறுத் திருக்கரமும் சிவபெருமான்
திருவடிக்கே பதித்த நெஞ்சும்
நடையறுப் பெருந்துறவும் வாகீசப்
பெருந்தகைதன் ஞானப் பாடல்
தொடையறுச் செவ்வாயும் திருவேடப்
பொலிவழகும் துதித்து வாழ்வாம்".

என்ற சிவஞான சுவாமிகள் திருப்பாடலுக் கேற்ப அமைந்து விளங்கும் திருவுருவம். தமிழகத்தில் இத்தகைய திருவுருவத்தைக் காண்பது அரிது.

இத் திருநாவுக்கரசர் தேவாரப் பாடசாலையில் இருபது ஆண்டுகளுக்கு மேலாக இருந்து, சிறந்த முறையில் திருமுறை இசைப் பயிர் வளர்த்து. பல மாணவர்களையும் உருவாக்கிய பெருமை, பழமார்நேரி தேவார ஆசிரியர், சைவத்திரு. ப. மு. தண்டபாணி ஐயர் அவர்களையே சாரும். தமிழ் இலக்கண இலக்கிய அறிவும், திருமுறைகளில் ஆழ்ந்த ஈடுபாடும் உடைய ஐயா அவர்கள் தம்

வாழ்நாளைத் தேவாரத்திற்காகவே ஈடுபடுத்தியுள்ளார்கள். மாலையில் பாடசாலையில் இலவசமாகத் தேவாரம் இசையுடன் கற்றுத்தருவார்கள். பின் கோயிலுக்குச் சென்று பூசை நேரத்தில் பண்ணென்ற இசை பாடி வழிபடுவார்கள். விழாக்காலங்களில் இவர்கள் இன்னிசையைக் கேட்கத் திரளாகக் கூடுவர். மாணவர்களை நன்முறையில் பயிற்றுவிக்கும் திறம் இவர்களுக்கே அமைந்த தனிச்சிறப்பு. "தேவார ஆசிரியர்" என்றால் இவ்வட்டாரத்தில் இவர் ஒருவரையே குறிக்கும். இவர்கள் பணியால் இன்று தமிழ்நாட்டில் தேவாரம் கற்றுணர்ந்தவர் பலராவர். ஐயா அவர்கள் நாவலர். பண்டித ந. மு. வேங்கடசாமிநாட்டார் அவர்கள் சொந்த ஊராகிய நடுக்காவேரியிலும், வடுகக்குடியிலும் இருந்து தேவாரப் பணியாற்றி வந்தார்கள். இவர்களது ஆசிரியராக அமைந்தவர்கள் அலமேலுபுரம் பூண்டி திரு. இராமசாமி செட்டியார் அவர்கள் ஆவார். திரு. செட்டியார் அவர்களது பெருமுயற்சியினால் அலமேலுபுரம் பூண்டியில் மாணிக்கவாசகர் திருமடமும், நாகாச்சியில் திருஞானசம்பந்தர் திருமடமும், பழமார்நேரியில் சுந்தரர் திருமடமும், திருக்காட்டுப்பள்ளியில் திருநாவுக்கரசர் திருமடமும் அமைக்கப்பெற்ற பெருமை சிறப்பிற்குரிய செயலாகும். திருநாவுக்கரசர் தேவாரப் பாடசாலையைப் புதுப்பித்துச் செயலாற்ற அன்பர்கள் முன் வருவார்களாக.

சமயப்பணி ஒன்றாலேயே சமயம் வளரும். நாவுக்கரசர் தேவாரப்பாடசாலையைக் காத்து நற்றமிழ் வளர்த்தல் நம் கடமையாகும். "என்கடன் பணிசெய்து கிடப்பதே" என்ற நாவுக்கரசர் திருவாக்கை நினைத்துப் பணி புரிய முயல்வோம்.

## 9. சமயப்பணி, திருப்பணி

ஆண்டுதோறும் ஆடித்திங்கள் மூன்றும் வெள்ளியன்று அம்மனுக்குச் சந்தனக்காப்பு விழா நடைபெற்று வருகிறது. அன்று இக்கோயிலில் உள்ள திருநெறியவையின் சார்பில் சமயச்சான்றோர்களின் சொற்பொழிவுகளும் நிகழ்கின்றன. சில ஆண்டுகளாக "திருவெம்பாவை" விழா. மாநாடு முதலியன மார்கழித் திங்களில் இங்கே சிறப்பாக நடைபெற்று வருகின்றன. கோயில் இறைபணியாளர். அறக்குழுவினர் முதலியோர் சிறந்த முறையில் சமயப்பணியாற்றி வருவது போற்றற்குரியதாகும்.

பழுதுற்று, மதில்கள் பல இடங்களில் இடிந்து, பிரகாரங்களில் செடி கொடி மரங்கள் நிறைந்து இருந்த இக்கோயிலை நல்ல முறையில் செப்பஞ்செய்துள்ளனர். கோயில் பணியில் ஈடுபட்ட ஊர் அன்பர்கள், பங்குனி உத்தர விழாக்குழுவினர், கோயில் அறக்குழுவினர், இறைபணியாளர்கள் அனைவரும் பாராட்டிற்குரியவர்களாவார்கள், கோயில் இப்போது புதுப் பொலிவுடன் திகழ்கிறது. வழிபடுவோர் தொகையும் நாளும் பெருகி வருகிறது. கோயிலைப் பற்றிய திருப்பதிகங்களை அம்மன் மண்டபத்தின் சுவர்களில் அழகுற எழுதியுள்ளனர். வழிபாட்டிற்கு வருபவர்கள் அப்பாடல்களை ஓதி இன்புறுகின்றனர்.

அழகமர் மங்கையோடமர்ந்த தீயாடியப்பர் திருக்கோயிலைப் பழுது பார்த்துச் செப்பனிட சிவநேயச் செல்வர்கள் திருப்பணிக் குழுவொன்றை நிறுவினார்கள்.

பொறுப்பு வாய்ந்த அக்குழுவுக்குத் தகுதியும் தக்காருமாகிய தொண்டின் செல்வர் திரு. P. S. இராஜ கோபால ஐயர் அவர்கள் தலைவராகவும், மரக்கடை வியாபாரம் திரு. N. கோவிந்தசாமி பிள்ளை, திரு. K. P. கிருஷ்ணய்யர் அவர்களும் திருப்பணிக் குழு உறுப்பினராகவும் இருந்து அம்மன் கோயில், கோபுரம் தளவரிசை ஆகியவற்றினைச் சிவநேயச் செல்வர்களின் பொருளுதவியால் நல்லமுறையில் செப்பஞ் செய்தனர். 24—9—64ஆம் நாள் கோயிலுக்கும், பரிவார மூர்த்திகளுக்கும் குடமுழுக்கு விழா சிறப்பாக நடைபெற்றது.

முன்னாள் அறநிலையக் குழுத் தலைவர் திரு. R. N. அருணாசலம் செட்டியார் அவர்கள் பெருமுயற்சியால் சிவநேயச் செல்வர்களின் பொருளுதவி கொண்டு கோயிலில் மின் விளக்குகள் போடப்பெற்றுள்ளன. இன்னும் சுற்றுப் பிரகாரங்களில் கற்பரப்பித் தளவரிசை செய்யவேண்டியிருக்கிறது.

இத்திருப்பணிக் குழு, கோயிலில் சிதைவுறும் நிலையிலுள்ள பெரியகோபுரத்தை மேற்பூச்சு பூசித் திருப்பணி செய்ய பொதுமக்களுக்கும் சிவநேயச் செல்வர்கட்கும் வேண்டுகோள் விடுத்திருக்கிறது. இத் திருப்பணிக்குச் சுமார் நாற்பதாயிரம் ரூபாய் செலவாகும் என மதிப்பிடப்பட்டுள்ளது. இத் திருப்பணிக் குழுவிற்கு அறநிலையப் பாதுகாப்புத் துறை ஒப்புதல் அளித்துள்ளது. திருப்பணிக்கு வேண்டிய பொருளில் ஒரு பகுதியை நன்கொடையாக அளிக்குமாறு அரசினரை இக் குழுவினர் வேண்டியிருக்கிறார்கள். பழமையான இத் திருக்கோயிலைச் செப்பனிட்டு அழகுப்படுத்த வேண்டிய சிவநேயச் செல்வர்களது கடமைகளிலொன்றாகும்.

## 10. சொத்து - வருமான விவரம்.

இக்கோயிலுக்குச் சொந்தமான நன்செய், புன்செய் நிலங்களும் கீழ்க்கண்ட விவரப்படி சுற்று வட்டார ஊர்களில் இருந்து வருகின்றன. அதன் வருமானத்தைக் கொண்டு அறநிலைய மேற்பார்வையாளர் நிர்வாகத்தின் கீழ் பூசை முதலியன நடைபெற்று வருகின்றன.

I. 23 எண். திருக்காட்டுப்பள்ளி வட்டத்தில் பட்டா எண் 12 ஆக 11 ஏக்கர் 94 செண்டு நன்செய் புன்செய் நிலங்களும்,

II. 22 எண். அலமேலுபுரம் வட்டத்தில் பட்டா எண் 194இல் 20 செண்டு நன்செயும், 198இல் 1 ஏக்கர் 13 செண்டு நன்செய் புன்செயும் ஆக 1 ஏக்கர் 33 செண்டு நிலங்களும்,

III. 27 எண். விட்டலபுர வட்டத்தில் பட்டா எண் 95 ஆக 40 செண்டு புன்செய் நிலமும்,

IV. 18எண். பழமார் நேரி வட்டம் முல்லக்குடி கிராமத்தில் பட்டா எண் 241 ஆக 2 ஏக்கர் 49 செண்டு நன்செய் நிலங்களும்,

V. 23எண். திருக்காட்டுப்பள்ளி வட்டம் ஒன்பத்து வேலி கிராமத்தில் பட்டா எண் 29 ஆக 1 ஏக்கர் 26 செண்டு நன்செய் நிலமும் ஆகமொத்தம் 17 ஏக்கர் 42 செண்டு நன்செய், புன்செய் நிலங்கள் கோயிலுக்குக் கட்டளையாகவும் சொந்தமானவையாகவும் இருக்கின்றன.

மேலும், திருக்காட்டுப்பள்ளி நகரப்பஞ்சாயத்துக் குட்பட்ட மேலவீதி மேலச்சரகில் 5–ஆவது எண்ணுள்ள மச்சுவீடு ஒன்றும், சந்நிதித்தெருவில் கதவு எண் 16 உள்ள மச்சுவீடு ஒன்றும், மற்றும் மேலவீதியில் கூரை வீடுகள் ஒன்பதும், சந்நிதித் தெருவில் மூன்றும் ஆக பதினான்கு வீடுகள் இருக்கின்றன.

| | | |
|---|---|---|
| 1. | ஷை கோயிலின் நிலம், கட்டளை நிலம் இவற்றின் ஆண்டு ஒன்றுக்கு வருமானம் 426 கலம் 6 மரக்கால் × 10= | 4,265—00 |
| 2. | ஷை கோயிலின் வீட்டு வாடகை, கட்டளை வீட்டு வாடகை இவற்றின் ஆண்டு ஒன்றுக்கு வருமானம் | 864—00 |
| 3. | புன்செய் வருமானம் ஆண்டு ஒன்றுக்கு | 65—00 |
| 4. | மோகினித்தொகை | 218—75 |
| | ஆக மொத்தம் ரூபாய் | 5,412—75 |

## *11. செப்புச்சிலைத் திருவுருவங்கள்*

இக்கோயிலில் செப்புச்சிலைத் திருவுருவங்களாக 1. சுவாமி 2. அம்மன் 3. பிரதோஷநாயகர் 4. சோமாஸ்கந்தர் 5. முருகன் வள்ளி தெய்வானை 6. நடராசர் 7. சிவகாமி 8. கணபதி 9. தண்டியடிகள் 10. சூலதேவர் 11. மாணிக்கவாசகர் 12. திருநாவுக்கரசர் 13. திருஞானசம்பந்தர் 14. பகீரதன் முதலியன உள்ளன.

## 12. திருவாபரணங்கள்-வாகனங்கள்

அம்மன் கவசம், பாதம், கை, வெள்ளிக்கிரீடம், காசிமாலை, பதக்கம் இரண்டு, நாகபடம், கலசம் முதலிய திருவணிகள் உள்ளன. அனைத்தும் வெள்ளியால் செய்யப்பெற்றவை.

மரத்தினால் கலைநுணுக்கத்தோடு எழிலுற அமைக்கப்பெற்ற பெரிய இடபம் 1. சிறிய இடபம் 1, யானை 1. குதிரை 1, மயில் 1, மூஷிகம் 1, அன்னப் பறவை 1, முதலிய வாகனங்கள் உள்ளன. பெரிய இடபவாகனம் சிறந்த முறையில் கண்டோர் வியக்கும் வண்ணம் அமைந்துள்ளது.

## 13. பிறகோயில்கள்.

திருக்காட்டுப்பள்ளியில் பெரிய கோயிலாகத் தீயாடியப்பர் திருக்கோயில் திகழ்கிறது. இவ்வூரிலுள்ள பிற கோயில்கள் கீழே தரப்பெற்றுள்ளன.

1. கோட்டை வாயில் பிள்ளையார் கோயில்
2. ஆஞ்சநேய சுவாமிகோயில் (அனுமார் கோயில் என்பர்)
3. கண்ணன் கோயில் (கிருஷ்ணன் கோயிலென்பர்)
4. காமாட்சியம்மன் கோயில்
5. பூதமனியம்மன் கோயில் (ஊர்ப்பிடாரி கோயில் என்பர்)
6. ஐயனார் கோயில் (சாஸ்தா)

7. சித்திவிநாயகர் கோவில் (முதலைக்குளம் என்கிற அக்கினித்தீர்த்தக்குளத்தின் கீழ்பால், காவல் நிலையத்தின் முன்புள்ளது) கார் நிலையம் முன்.

8. ஸ்ரீ அபிஷ்டவரதவிநாயகர் கோயில் (பாம்பலம்மன் பிள்ளையார் கோயில் என்பர்)

9. காவிரிக்கரை நீராடுதுறையில் அமைந்துள்ள காவிரிப்பிள்ளையார் கோயில்.

10. புதுச்சத்திரத்தில் உள்ள விசுவநாதர் கோயில், வேணுகோபாலசுவாமி கோயில்.

11. வடக்குவாயில் கோட்டை முனியாண்டவர் கோயில்.

12. தண்டாயுதபாணி கோயில் (ஒன்பத்து வேலி திருக்காட்டுப்பள்ளிக்கு இடையில் அமைந்துள்ளது.)

13. ஒன்பத்துவேலியில் சித்திவிநாயகர் கோயில்.

14. திரௌபதி அம்மன் கோயில். (இங்கே ஆண்டு தோறும் சிறந்த முறையில் விழா நடைபெறுகிறது)

15, வன்மீகநாதசுவாமி கோயில்

16. காமாட்சியம்மன் கோயில்

17. ஐயனர் கோயில் (சாஸ்தா) ஒன்பத்து வேலி

18. கூடநாணலில் உள்ள பிள்ளையார் கோயில்

19. குளத்தாலம்மன் கோயில்



திருக்காட்டுப்பள்ளியில் அமைந்து
விளங்கும் தண்டபாணிக் கடவுள்
மயில்மேல் காட்சி தரும் மாட்சி.



காந்தி அடிகள் நினைவு
மணிக் கூண்டு.

## 14. சுற்றிலும் உள்ள தலங்கள்

### திருக்கானூர்

இத்தலத்திற்கு வடக்கே 3 கி. மீ. தூரத்தில் கொள்ளிடத்தின தென்கரையில் திருக்கானூர் உளளது. இப்போது கோயில் மட்டும் உள்ளது. ஊர் மணல் மேடிட்டு விட்டது. கோயில் ஒரு காலத்தில் மணலால் மூடப்பட்டிருந்தது நூறுண்டுக்கு முன்னரே இக்கோயில் கண்டுபிடிக்கப்பட்டதால், கோயில் மணல் மேட்டின் நடுவில், நிலமட்டத்திற்குத் தாழ்ந்தும் இருக்கிறது. இறைவன்–செம்மேனிநாதர், முளைநாதர்; இறைவி -சிவயோகநாயகி. இதனைத்திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் பாடியுள்ளனர் இறைவி சிவயோகம் செய்து கொண்டிருக்கும் போது சிவபெருமான் தீவடிவமாகக் காட்சியளித்தார் என்பது தலவரலாறு.

“காந்தன் மலர்கள் நிறைந்த கானூர்”, “சோலைக் கானூர்”, “களிவண்டியாழ் செய்கானூர்”, “கந்தமல்கு கானூர்” என்றெல்லாம் ஞானசம்பந்தரும், “கண்டு கொள்மின் கானூர் முளையினை” என்று திருநாவுக்கரசரும் பாடியுள்ளனர். கோயிலுக்குச் சிறிது தூரத்தில் புதகிரி என வழங்கும் வானராங்குடி, பவனமங்கலம், விஷ்ணம் பேட்டை, கூத்தூர், நாகாச்சி முதலிய ஊர்கள் உள்ளன.

### திரு அன்பிலாலந்துறை

இத்தலத்திற்கு வடமேற்கே 8 கி. மீ தொலைவில் அன்பில் எனப்படும் இத்தலம் கொள்ளிடத்தின் வடகரையில் இருக்கிறது. இது சைவ வைணவத்

திருப்பதியாகும். திருஞானசம்பந்தர் தேவாரம் பெற்ற தலம். இறைவன்-சத்தியவாகீசர் ஆலந்துறைநாதர் இறைவி-சௌந்தரநாயகி. திருமழிசையாழ்வார் இங்குள்ள திருவடிவழகிய நம்பியாகிய திருமாலையும், அழகிய வல்லி நாச்சியாகிய தாயாரையும் பாடியுள்ளார். இங்கு எழுந்தருளியுள்ள மாரியம்மனுக்குத் திருவிழா, பங்குனித் திங்களில் மிகச்சிறப்பாக நடைபெற்று வருகிறது.

**திருமழபாடி**

இத்தலத்திற்கு வடகிழக்கே 12 கி. மீ. தூரத்தில் வைத்தியநாதசுவாமி கோயில் கொண்ட திருமழபாடி கொள்ளிடத்தின் வடகரையில் உள்ளது. நந்திதேவருக்குத் திருமணம் பங்குனியில் இங்கே நடைபெறும். இதற்காக ஐயாற்றப்பரும் நந்தியும் திருமழபாடிக்கு வருகின்றனர். சுந்தரர் "பொன்னார் மேனியனே" என்ற பதிகத்தில் பாடல் தோறும் "உன்னையல்லால் இனி யாரை நினைக்கேனே" என்று இத்தல இறைவனைக் குறித்துப் பாடியுள்ளார். இறைவன் வயிரத்தூணநாதர், இறைவி: அழகாம்பிகை. மூவரும்பாடியுள்ளனர்.

**திருவையாறு**

திருக்காட்டுப்பள்ளியிலிருந்து கிழக்கே 16 கி. மீ. தொலைவில் காவிரியின் வடகரையில் உள்ள தலம். வடவாறு, வெண்ணாறு, வெட்டாறு, குடமுருட்டி, காவிரி என்னும் ஐந்து ஆறுகளை உடையதாகையால் ஐயாறு எனப் பெயர்பெற்றதென்பர். அப்பருக்குக் கைலைக்காட்சி தந்தருளிய தலம். ஏழூர்விழா சித்திரைத் திங்களில் இங்கே சிறப்புற நடைபெறும். வரலாற்றுப்

புகழ்மிக்க இவ்வூரில் தியாகராச சுவாமிகள் சமாதி உள்ளது. ஐயாற்றுக் கோயில் தருமபுர ஆதீனத்திற்குச் சொந்தமானது. இவ்வூரில் பல படித்துறைகளும், பூசை மண்டபங்களும், அரசர் சமஸ்கிருத தமிழ்க்கல்லூரிக் கட்டிடங்களும், கவினுறு சத்திரங்களும் உள்ளன. இறைவன் ஐயாறப்பர், பஞ்சநத ஈஸ்வரர், இறைவி-அறம் வளர்த்த நாயகி, தருமாம்பிகை. அப்பர், சம்பந்தர், சுந்தரர் மூவரும் பாடியுள்ளனர். திருவையாற்றுக்கருகில் திருநெய்த்தானம், திருப்பெரும்புலியூர் திங்களூர், திருப்பழனம் முதலிய தலங்கள் உள்ளன.

### கண்டியூர்

திருக்காட்டுப்பள்ளிக்கு நேர்கிழக்கே, காவிரியின் தென்கரையில் உள்ளது. 16 கி. மீ. தூரத்தில் உள்ள இவ்வூர் வீரத்தானங்கள் எட்டில் ஒன்று. பிரமன் தலையைக் கொய்த இடம். மேற்கு நோக்கிய சந்நிதி. இறைவன் வீரட்டேசுவரர் இறைவி மங்களநாயகி. சம்பந்தரும் அப்பரும் இவ்வூரைப் பாடியுள்ளனர். கண்டியூரில் திருமால் கோயிலும் உள்ளது. திருமங்கையாழ்வார் பாடியதலம். திருமால்—சியாமளமேனிப் பெருமாள், தாயார்-கமலவல்லி நாச்சியார்.

### திருப்பூந்துருத்தி

கண்டியூருக்கு மேற்கே 3 கி. மீ. தூரத்தில் காவிரியின் தென்கரையில் உள்ளது. சோழமன்னர் ஒருவர் துருத்தியை வைத்து வழிபாடு செய்ததனால் இப்பெயர் வந்தது என்பர். சம்பந்தருக்காக நந்தி இங்கே விலகி இருக்கிறது. அப்பர் சுவாமிகள் அமைத்த திருமடம்

ஒன்று இங்குள்ளது. "திங்களும் ஞாயிறும் தோயும் திருமடம்" என்று அம்மடம் சேக்கிழாரால் பாடப் பெற்றுள்ளது. இறைவன் - புஷ்பவன நாதர், இறைவி - அழகார்ந்த நாயகி, இத்தலத்திற்கு ஒரு கி மீ, தூரத்தில் மேற்குப் பகுதியில் திருவாலம் பொழில் என்ற தலம் மேற்குப் பார்த்த சந்நிதியோடு விளங்குகிறது. எட்டு வசுக்களும் வழிபாடு செய்த தலம். இறைவன் - ஆத்தும் நாதேசுவரர் இறைவி ஞானம்பிகை.

## *15. சுற்றிலும் உள்ள பிற ஊர்கள்*

**நடுக்காவேரி**

திருக்காட்டுப்பள்ளியிலிருந்து கிழக்கே 8 கி. மீ. தொலைவில் குடமுருட்டியின் தென்கரையில் இவ்வளமான ஊர் உள்ளது. பெரும்புலவர், நாவலர். பண்டித ந. மு, வேங்கடசாமி நாட்டார் அவர்கள் பிறந்த ஊர். அவர் சமாதி ஆற்றின் கரையில் உள்ளது. திருநாவுக்கரசர் திருமடம் ஒன்று மேலநடுக்காவேரியில் அமைந்து விளங்குகிறது. கீழநடுக்காவேரியிலும் திருமடம் ஒன்றுள்ளது. இவ்வூரில் சிவன்கோயில் ஒன்றும் உள்ளது. மேலநடுக்காவேரியில் உள்ள முருகன் கோயிலில் ஆண்டுதோறும் பங்குனி உத்தரத் திருவிழாவைச் சிறப்பாக நடத்துகின்றனர்.

**கோனேரிராசபுரம்**

நடுக்காவேரிக்கு மேற்கே 2 கி. மீ. உள்ள சிற்றூர். இதன் பெயர் கரும்பூர் – கோனேரிராசபுரம். தற்போது கருப்பூர் என்று வழங்கப்படுகிறது. சோழ மன்னர் ஆட்சியில் இவ்வூர் உயர்நிலையிலிருந்தது என்ப

தற்குச் சான்றுகள் பல உள்ளன. சைவ, வைணவக் கோயில்கள் இங்கு இருக்கின்றன. மணத்திடல் என்னும் பகுதியும் இதனைச் சார்ந்துள்ளது. இலிங்கப்ப நாயக்கர் இப்பகுதியை ஆட்சிசெய்தார். அவர் இறந்த போது அவரது மனைவியார் உடன்கட்டை ஏறிய நிகழ்ச்சி நடைபெற்ற 'தீப்பாய்ந்த மண்டபம்' இன்றும் உள்ளது. ஆனால் பாழ்பட்டு இருக்கிறது. இவ்வூரிலும் குடமுருட்டியாற்றங்கரையில் முருகன்கோயில் ஒன்று வனப்புற விளங்குகிறது.

**வளப்பக்குடி**

திருக்காட்டுப்பள்ளிக்குக் கிழக்கே 6 கி. மீ. தொலைவில் காவிரி குடமுருட்டி ஆறுகளுக்கு நடுவே வளமான இவ்வூர் இருக்கிறது.முத்தரையர் என்ற குலத்தவர் இங்கு வாழ்கின்றனர். தூக்குணும்பாளையம் என்ற பெயரில் இப்போது இவ்வூர் வழங்கப்படுகிறது.

**செந்தலை**

திருக்காட்டுப்பள்ளிக்குக் கிழக்கே 5 கி. மீ தொலைவில் குடமுருட்டியாற்றின் தென்கரையில் உள்ளது. வரலாற்றுப் புகழ்மிக்க ஊர். கல்வெட்டுக்கள் மிகுதியும் இங்குள்ளன. மன்னூர் சமுத்திரம். சந்திரலேகை என்ற சொல்லே சிதைந்து "செந்தலை" ஆயிற்று என்பது ஆராய்ச்சியாளர் முடிபு. களப்பிரர் தென்னிந்தியாவை ஆண்ட காலத்தில் (கி. பி. 2-ஆம் நூற்றுண்டு முதல் 5-ஆம் நூற்றுண்டு வரை) அவர்கள் புத்தமதத்தைப் பரப்பியும் சைவசமயக் கோயில்களை அழித்தும் வந்தனர். அவர்களை விரட்டிய முத்தரையர்கள், செந்தலையில்

வாழ்ந்தனர். நாலடியாரில் முத்தரையர் பற்றிய பல பாடல்கள் உள்ளன. செந்தலைக் கோயிலில் முத்தரையர் பற்றிய வெண்பாக்கள் கல்வெட்டில் காணப்படுகின்றன. தமிழ்நாட்டிற்குப் பயனுள்ள பல செய்திகள் இங்குள்ள கல்வெட்டுக்களால் கிடைத்துள்ளன. செந்தலையில் வாழ்ந்த தாசி சந்திரலேகை என்பாள், இறைவனின் விககிரகத்தை ஸ்தபதி வார்த்து எடுத்த போது விக்கிரகத்தின் அழகில் ஈடுபட்டு இருகைகளாலும் அணைத்த காரணத்தால் அவள் கைவிரல் ரேகை இறைவனின் திருமேனியில் காணப்படுகிறது.

இவ்வூருக்கும் திருக்காட்டுப்பள்ளிக்கும் இடையே வரகூர், கண்டமங்கலம், மைக்கேல்பட்டி முதலிய சிற்றூர்கள் பல உள்ளன. வரகூரில் புகழ்பெற்ற பெருமாள் கோயிலும் கண்டமங்கலத்தில் சிவன் கோயில், பெருமாள் கோயில், அம்மன் கோயில் முதலியனவும் உள்ளன.

**நேமம்** (நியமம்)

திருக்காட்டுப்பள்ளிக்கு மேற்கே 5 கி. மீ. தொலைவில் காவிரியின் தென்கரையில் நேமம் இருக்கிறது. இதன் பழம்பெயர் நியமம். ஐராவதம் என்ற தேவயானை வழிபட்ட ஐராவதேசுவரம் கோயில் இங்குள்ளது. சோழமன்னா சிலர் இக்கோயிலுக்கு மானியங்கள் கொடுத்துள்ளனர். இவ்வூரைச் சுற்றியுள்ள வயல்களில் பல பெரிய லிங்கங்கள் காணப்படுகின்றன. களப்பிரரால் சிதைக்கப்பட்ட கோயில்களில் இவை இருந்திருக்க வேண்டும். சிதைந்த கோயில்களின் பகுதி

களைக் கொண்டே செந்தலைக்கோட்டை கட்டப்பெற்றிருக்கவேண்டும். இவ்வூரும் இதனருகேயுள்ள ஆர்க்காடு என்னும் ஊரும் முத்தரையர் தலைநகரங்களாக இருந்தவை. நேமம், கருப்பூர் போன்ற இடங்களில் இருந்த சிவன்கோயில்கள இடிந்த பிறகு அவற்றைக் கொண்டு திருப்பெருந்துறைக் கோயில் கட்டப்பட்டதாகச் செந்தலைக் கல்வெட்டு ஒன்று கூறுகிறது.

திருஞானசம்பந்தர் மேற்கே இருந்து பல தலங்களை வழிபட்டு. இவ்வழியாக வந்து நியமம் கோயிலை வணங்கிவிட்டு. திருக்காட்டுப்பள்ளியை அடைந்ததாகப் பெரிய புராணம் கூறுகிறது.

"அடும்பணி செஞ்சடையார் பதிகள் அணைந்து
பணிந்து நியமம் போற்றிக்,
கடுங்கைவரை உரித்தார் மகிழ்ந்த காட்டுப்
பள்ளிப்பதிகை தொழுவார்"

(பெரியபுராணம்-சம்-349)

நேமத்தில் ஆண்டுதோறும் திருவிழா மிகச் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

**கோயிலடி**

திருக்காட்டுப்பள்ளியிலிருந்து மேற்கே சுமார் 8 கி, மீ தொலைவில் காவிரிக்கும் கொள்ளிடத்துக்கும் இடையில் உள்ளது. 18ஆம் நூற்றுண்டில் இங்கே ஆங்கிலேயருக்கும் பிரெஞ்சுக்காரருக்கும் பல போர்கள் நிகழ்ந்தன. கோச்செங்கட் சோழன் காலத்திலும், இங்கே போர் நடைபெற்றது. இவ்வூருக்குச் சடைமுடி

திருப்புறம் என்ற பழைய பெயர் உண்டு. சடைமுடி நாதர் கோயில் கோயிலடிப்பெருமாள் கோயிலுக்குக் கிழக்கே சிறிது தொலைவில் இருக்கிறது. இங்குள்ள பெருமாளுக்கு நெய்வேத்தியம் 'அப்பம்' ஆகும். அவர் வயோதிகராக இருப்பதால் பல் இல்லாத நிலையில் உண்ண இதமாக அப்பம் படைக்கப்படுகிறது. இதனால் அப் பெருமாளுக்கு 'அப்பக்குடத்தான்' என்ற பெயர் இன்னும் வழங்கப்படுகிறது. ஆண்டுதோறும் வைகுண்ட ஏகாதசியன்று சொர்க்கவாசல் திறக்கும் விழா மிகச் சிறப்பாக இங்கு நடைபெற்று வருகிறது இவ்வூர் ஊராட்சி மன்றத்தாரால் அழகுற அமைக்கப் பெற்ற திருவள்ளுவர் திருவுருவம் இருக்கிறது.

**இளங்காடு:**

திருக்காட்டுப் பள்ளியிலிருந்து நேர் மேற்கே சுமார் 5 கி. மீ. தொலைவில் உள்ளது இளங்காடு. தமிழ்ப் புலவர்கள் பலர் இவ்வூரில் உள்ளனர். இவ்வூருக்குத் தமிழ்ப் புலவர்கள் பலரும் வந்து சொல் மழை பொழிந்திருக்கின்றனர். இங்கே ஊருக்கு நடுவே மேட்டுப் பகுதியில் சிவன் கோயில் அமைந்திருக்கிறது. கலைக்கோயிலும் அருகே இருந்து கவின் செய்கிறது. இவ்வூருக்குக் கீழ்பால் அரங்கநாதபுரம் என்ற ஊர் இருக்கிறது. இவ்வூருக்கு கிழக்கே முல்லைக்காடு, ஆர்க்காடு முதலிய ஊர்கள் உள்ளன முல்லைக்குடி கல்வெட்டில் இடம்பெற்றுள்ளது. இவ்வூரில் அழகிய ஒரு சிவன் கோயில் உள்ளது,

**கல்லணை: (GRAND ANICUT)**

ஈராயிரம் ஆண்டுகட்கு முன்னரே சோழன் கரிகால னால் கட்டப்பெற்ற பேரணை இது. சோழவள நாட்

டைச் சோறுடையதாகச் செய்யும் இவ்வணை திருக்காட்டுப் பள்ளிக்கு மேற்கு 16 கி. மீ. தொலைவில் உள்ளது. இவ்வணையிலிருந்து காவிரி. வெண்ணாறு கல்லணைக் கால்வாய் முதலிய ஆறுகள் பிரிந்து செல்கின்றன. மிகுதியாக வருகின்ற நீரைக் கொள்ளும் இடம் கொள்ளிடம் எனப்படும் ஆறு வடபகுதியில் உள்ளது.

**பூதலூர்**

திருக்காட்டுப் பள்ளிக்குத் தெற்கே 8 கி மீ. தொலைவில் தஞ்சாவூர் - திருச்சி இரயில்பாதையில் இவ்வூர் இருக்கிறது. உய்யக்கொண்டான் கால்வாயின் தொடர்ச்சிஇப்பகுதியில்இருந்தது என்பதற்கு இவ்வூரில் அறிகுறிகள் உள்ளன. இதன் அருகே புதிதாக வெட்டப்பெற்ற கல்லணைக் கால்வாய் என்னும் ஆறு செல்கிறது. பூதலூர் கிராமத்தில் சிவன் கோயில், விநாயகர் கோயில் முதலியன உள்ளன. இவ்வூருக்கு வடபுறம் வெண்ணாறு செல்கிறது. வெண்ணாற்றின் வடகரையில் **விண்ணமங்கலம்** என்னும் ஊர் உள்ளது.

**புதகிரி**

திருக்காட்டுப் பள்ளியிலிருந்து வடக்கே 3 கி. மீ· தொலைவில் கொள்ளிடக் கரையில் இச்சிற்றூர் உள்ளது. செவ்வந்தி புராண நூலில் இவ்வூரைப்பற்றிய குறிப்புக்கள் உள்ளன. மாவலியார் என்ற பட்டமுடையவர்கள் சிலர் இப் பகுதியில் வாழ்கின்றனர். வலிமையுடன் போரிட்டவர்களுக்குச் சோழ அரசர்கள் இத்தகைய பட்டங்களை நல்கினர். வானராங்குடி என்றும் இவ்வூருக்குப் பெயருண்டு. இதன நகே சிறிது தெற்கே வளப்பம் மிகுந்த பவனமங்கலம், கூத்தூர் என்ற ஊர்களும் கிழக்கே மகாராசபுரம் சாத்தனூர் என்ற ஊர்களும்

காவிரியின் வடகரையில் உள்ளன. திருச்சடை வளந்தை எனும் ஊரில் சிவன் கோயில் ஒன்று சாலை ஓரத்தில் இன்றும் இருந்து வருகிறது.

### பழமார்நேரி

இதன் பழைய பெயர் பழைய மாறன் ஏரி, திருக்காட்டுப்பள்ளியிலிருந்து மேற்கே 2 கி. மீ, இருக்கிறது. திருக்காட்டுப்பள்ளி உயர்நிலைப் பள்ளியை நிறுவிய சர். பி. எஸ். சிவசாமி ஐயர் இவ்வூரினரேயாவார். (இவ்ரைப்பற்றிய விவரம் பிறிதோரிடத்தில் உள்ளது.)

### புதுச்சத்திரம்

திருக்காட்டுப்பள்ளி ஊராட்சியைச் சார்ந்த இவ்வூர் காவிரியின் வடகரையில் உள்ளது. இங்கே சிவன் கோயில், பெருமாள் கோயில் உள்ளன. இங்கு பயணிகள் விடுதியொன்று அமைக்கப்பட்டுள்ளது.

### ஒன்பத்து வேலி

திருக்காட்டுப் பள்ளியின் கிழக்குப் பகுதியில் அமைந்து அவ்வூர் ஊராட்சியோடு இணைந்த ஊர், ஒன்பதுவேலி என்னும் பகுதி இவ்வூர்க்கல்வெட்டுக்களில் ஒன்பதிற்றுவேலி எனக் கூறப்பட்டிருக்கிறது. ஊரின் கிழக்கே சாலையின் வடபுறம் அழகிய வல்மீகநாத சுவாமி எனப்படும் சிவன்கோயில் ஒன்று உள்ளது. திருக்காட்டுப் பள்ளிக்கும் ஒன்பத்துவேலிக்கும் இடையில் ஸ்ரீ தண்டபாணி சுவாமி கோயில் இருக்கிறது. பங்குனி உத்திரத்திலும், மாதக் கார்த்திகை நாட்களிலும் விழாவும், பூசையும் சிறப்பாக நடைபெறும்.

# 16. கல்வெட்டுக்கள்.

## அம்மன் கோயில் கல்வெட்டுக்கள்:

திருக்காட்டுப் பள்ளித் திருக்கோயிலில், மாரபன்ம ரான திரிபுவன சக்கரவர்த்திகள் சோணாடு வழங்கிய சுந்தரபாண்டிய தேவனுடையது ஒன்றும், திரிபுவன சக்கரவர்த்திகள் கோநேரின்மை கொண்டான் என்னும் சோழ மன்னனது கல்வெட்டு ஒன்றும் ஆக இரண்டு கல்வெட்டுக்கள் உள்ளன.

இவ்விரு கல்வெட்டுக்களினாலும் அம்மனது திருப் பெயர் அழகமர் மங்கையார் என்று அறியக் கிடக்கின் றது. இச்செய்தி பெருமகிழ்வு அளிப்பதாயுள்ளது. இந்த அம்மன் கோயில் விருதராச பயங்கர வளநாட்டுக் கோட்டூர் உடையான் விசுவநாயகன் ஆன செம்பியன் பல்லவரையன் என்பவனால், சோணாடு வழங்கிய சுந்தர பாண்டியன் அரியணை ஏறிய ஏழாம் ஆண்டில்(அதாவது கி. பி, 1216 ஆண்டில்) கட்டப்பெற்றது என்றதொரு அரிய செய்தியும் புலப்படுகின்றது. எனவே, இத்திருக் கோயில் எடுப்பிக்கப்பெற்று இற்றைக்கு 750 ஆண்டு கள் ஆகின்றன.

மேலும், மாறனேரி, ஒன்பதிற்றுவேலி (ஒன்பத்து வேலி) மூல்லைக்கொடி இவ்வூர்களில் பதின்மூன்று வேலி கள் இவ்வம்மனுக்கு இறையிலியாக விடப்பட்டிருந்தன என்றும் அக்கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன. அவ்விரு கல்வெட்டுக்களையும் அன்பர்கள் படித்து மகிழுமாறு பின்னே கொடுக்கப்பட்டுள்ளன.

## *திருக்காட்டுப்பள்ளி கல்வெட்டுக்கள்:*

### எண் 1 (A. R. No. OF 1897)

சௌந்தரநாயகி கோயிலின் மேல்புறச்சுவர்: வரி(1) ஸ்வஸ்தி ஸ்ரீ கோமாற பங்மரான திரிபுவனச்சக்கரவர்த்திகள் சோணாடு வழங்கிய சுந்தர பாண்டிய தேவற்கு யாண்டு எ-வது மீன நாயற்றுப் பூர்வபக்ஷத்து நவமியும் பெற்ற பூசத்து நாள் (ரிஷப மூகூர்த்தத்து உடையார் திருக்காட்டுப் பள்ளி உடைய நாயனுற்கு திருக்காமக் கோட்டமுடைய பெரிய நாச்சியார் அழகமர் மங்கையாரை எழுந்தருளுவித்து — — பி — — — ட்டை பண்ணி இந்நாச்சியாற்கு (3) திருக்கற்றளியும் சாத்தி திருச்செல்வம் வளர்க்க மாறனேரியான சீன சிந்தாமணி சதுர்ப்பேதி மங்கலத்திலும் முல்லைக் குடியிலும் வேண்டும் நிலம் கொண்டு விட்டான் வடகரை (4) விருதராச பயங்கர வளநாட்டு பிர்ம்மதேசம் கோட்டூர் மத்தியஸ்தன் கோட்டூர் உடையான் உதையஞ்செய்தான் விசுவ நாயகன் ஆன செம்பியன் பல்லவரையன்

### எண் 2. (A. R. No. 53 of 1897)

வரி-(1) ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவன சக்கரவர்த்தி கோநேரின்மை கொண்டான் பாண்டி குலா சனி வளநாட்டு உடையார் கோயில் தேவகன்மிக்கு

(2)ம் ஸ்ரீ மாஹேஸ்வர கண்காணி செய்வார்க்கும் சீகாரியஞ் செய்வானுக்கும் இக்கோயில் திருக்காமக் கோட்டமுடைய நாச்சியார் அழகமர் மங்கையர்க்கு வேண்டும் நிவந்தங்

(3) களுக்கு இருப்பதாக இந்நாட்டுமாறனேரியான தீன சிந்தாமணி சருப்பேதி மங்கலத்து திருநாமத்துக் காணியான நிலம் மூவேலி உட்பட ஒன்பதிற்று வேலி நிலமும், முல்லைக்குடி

(4) யில் திருநாமத்துக் காணியான நிலம் வேலியும் பதின்மூன்றுவது முதல் தேவதான இறையிலியாக இடக்கடவதாகப் பெறவேண்டுமென்று காங்கேயராய னும் சேதிரா

(5) யனும் நமக்குச் சொன்னமையில் இப்படிச் செய்யக்கடவதாக வரிக்கூறு செய்வார்களுக்குஞ் சொன் னோம். இந்நிலம் பதின்மூன்றுவது முதல் தேவதா

(6) ன் இறையிலியாக கைக்கொண்டு நிவந்தஞ் செலுத்தச் சொன்னோம். எழுதினேன் திருமந்திர ஓலை இராஜ நாராயண மூவேந்த வேளான். இவை காங்கேய ராயன் எழுத்து. இவை லங்கேஸ்வர

(7) ன் எழுத்து. இவை சேதிகுலராயன் எழுத்து. இவை வாணயிராயன் எழுத்து இவை சி — ம் பெற்ற ரயன் எழுத்து. இவை பிருதிரங்கன் எழுத்து. இவை — — எழுத்து.

எண் 3. (A. R. No. 55 OF 1897)

இரண்டாம் கோபுரத்து வாசலின் இடப்பக்கம்.

வரி (1) விக்றம வருஷம் மார்கழி யஎஉ ஸ்ரீமன் மகா மண்டலீசுரன் மேதினி மீசுர கண்ட கட்டாரி சாளுவ சாளுவத் திருமலை தேவமகாயிராசர் திருக்காட் டுப்பள்ளித் தானத்திற்கு நிருபம் தங்கள் கோயில் சூல வரி கொத்திலக்கை நாட்டுக் காணிக்கை. நாட்டு —

சிக்கம் ஊர் தலை ஆரிக்கம் புறவரி பிறதானி சோடி அதிகாரி சோடிக்கணக்கர் சோடிகல்லணை காடுவெட்டு மற்றும் எப்பேற்பட்ட பல உபாதியும் சந்திராதித்த வரையும் சறுவ மானியம் ஆக கழித்துவிட்ட அளவுக்கு உடையவற்கும் மகாபூசையும் திருப்பணியும் குறைவற நடத்தி சுகத்திலே யிருக்கவும்.

(இக் கல்வெட்டு 20 வரிகளில் உள்ளது.)

## *17. பாடியவர்கள்.*

1 திருஞான சம்பந்தர் தேவாரம் கொல்லிப்பண் 1,

2 திருநாவுக்கரசர் தேவாரம் குறுந்தொகை 1.

3 சேக்கிழார் அருளிய பெரிய புராணத்தில் திருஞான சம்பந்தர் வரலாற்றில் (350ஆம் பாடல்) 1.

4 17ஆம் நூற்றுண்டில் திகழ்ந்த சிவப்பிரகாச சுவாமி கள் பாடிய பாடல் 1.

5 அண்மைக் காலத்தில் வாழ்ந்த திரு. உலகநாத ஆச்சாரியார் பாடிய திருவிரட்டை மணிமாலை என்ற நூல். பாடல் முழுவதும் கிடைக்கவில்லை. கிடைத்த ஒரு பாடல் மட்டும் இந்நூலில் உள்ளது.

6 அரங்கநாதபுரம் - பாலகவி. முத்து கோதண்ட ராமன் அவர்கள் பாடிய (திருத்தாண்டகஅமைப்பு) பாடல்கள் 10.

சிவப்பிரகாசர்:

17ஆம் நூற்றுண்டில், தொண்டைமண்டலத்தில் காஞ்சிபுரத்தில், குமார சுவாமியாரது அருமந்த மைந்தராகத் தோன்றியவர் சிவப்பிரகாச சுவாமிகளாவர். இள

மையிலேயே சமயக் கல்வியும் இலக்கண இலக்கியமும் நன்கு கற்றார். திருநெல்வேலியடைந்து வெள்ளியம் பல வாண முனிவரிடம் பாடங்கேட்டு நுண்ணறிவுடையவ ராகத் திகழ்ந்தார். நால்வர் நான்மணிமாலை இயற்றிய அருள்ஞானச் செம்மல் இச் சிவப்பிரகாசரேயாவார். இவர் பாண்டிய நாட்டிலுள்ள திருநெல்வேலிக்குச் சென்று, தமதூருக்குத் திரும்பி வந்து கொண்டிருக்கை யில், திருக்காட்டுப்பள்ளி என்னும் இத்தலத்தில் ஒரு நாள் தங்க நேர்ந்தது. அப்பொழுது அறிவிற் சிறந்த பெண்ணொருத்தி, வீதியினிடத்தே உப்பு விற்றலைக் கண்டு, இரக்கமுற்றுத் திருநோக்கத் தீட்சை செய்து அவளது நல்லூழையும் பரிபக்குவத்தையும் உணர்ந்து, அவளுடைய புலமையைப் பிறர்க்குப் புலப்படுத்தத் திருவுளங்கொண்டார். (இவ்வூரில் உப்புக் காய்ச்சி வந்தனர் என்பதை "உப்புக் காய்ச்சி மேடு" என்ற இடம் வழக்கிலிருப்பதைக்கொண்டு அறிய முடிகிறது. அவ்விடத்தில்தான், (தண்டாயுதபாணி ஆலயத்திற்கு முன் பஞ்சாயத்துக் கூட்டு மன்றத்தினரால் நடத்தப் பெறும் உயர் தொடக்கப்பள்ளி இன்று இருக்கிறது.)

"நிறைய வுளதோ வெளிதோ கொளுவேம்
பிறையை முடிக்கணிந்த பெம்மான் — உறையும்
திருக்காட்டுப் பள்ளி திரிபாவாய் நீயிங்
கிருக்காட்டுப் பள்ளி யெமக்கு"

என்னும் வெண்பாவைத் திருவாய் மலர்ந்தருளினார். உடனே அப் பெண்,

"தென்னேங்கு தில்லைச் சிவப்பிரகா சப்பெருமான்
பொன்னேங்கு சேவடியைப் போற்றினோ—மன்னேன்
திருக் கூட்ட மத்தனைக்கும் தெண்டனிட்டோம் தீராக்
கருக்கூட்டம் போக்கினேங் காண்"

என்று பாடி மனமுருகி விரைந்து வந்து சுவாமிகள் திருவடி பணிந்து நற்கதி யடைந்தாள். இவ் வரலாறு 17ஆம் நூற்றாண்டு தமிழ்ப் புலவர்கள் வரலாற்றினால் அறியக் கிடக்கிறது. சிவப்பிரகாசர் பல சிறந்த சமய நூல்களை அருளியவர். தம் 32ஆம் வயதில் இறை திருவருளில் கலந்தார். இவரது சமாதி வெங்கனூரில் இருக்கிறது.

## 18. பங்குனி உத்தர விழாச் சிறப்பு.

கங்கையிற் புனிதமாய பொன்னி நதியின் தென் கரையில் அமைந்ததும் பராந்தக சோழன் காலத்துக் கற்றளியாகி சீருஞ் சிறப்புடன் புகழ்பெற்று விளங்கி வருவது மேலைத் திருக்காட்டுப்பள்ளியெனும் இத்திருத் தலமாகும். தொன்றுதொட்டு விழாவெடுத்துப் பெரு மகிழ்வுற்றனர் இப் பகுதியிலுள்ள சிவநேயச் செல்வர் கள், வசந்த விழாச் சிறப்பையும் தோற்றத்தையும் முன் பகுதியில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது.

என்றாலும் திருக்காட்டுப் பள்ளியில் உத்தரவிழா வைச் சிவநேயச் செல்வர்கள் சிறப்பாகக் கொண்டாட அவ்வப்போது நன்கொடையாக வசூலித்து வந்திருக் கிறார்கள். நாள்தோறும் கடைகளிலும், தலைச்சுமையா கப் பொருள் கொணர்ந்து விற்பவரிடமும் 1 பைசாவாக வசூலித்து அச்சிறுதொகைகொண்டு விழா நடத்தி

யிருக்கிறார்கள். பின்னர் அத்தொகை நாளொன்றுக்குக் காலணு வீதமாக வசூலிக்கப்பட்டது. தற்போது 2 புதுக் காசுகள் வீதம் வசூலித்து விழா நடத்தி வருகின்றார் கள்.

'சிறுதுளி பெருவெள்ளம்' என்னும் பழமொழிக் கேற்ப நாள்தோறும் வாங்குகின்ற இச்சிறுதொகை ஆண் டொன்றுக்கு சுமார் ரூ. 1600/- க்கு மேல் வரவு கிடைக் கின்றது. மேலும் உத்தர விழா குழுவுக்குச் சொந்த மான கடைகள் இரண்டு கடைத்தெருவில் உள்ளன. முறையே 27, 103 எண்ணுகை உள்ள அவற்றின் மூலம் ஆண்டொன்றுக்கு சுமார் ரூ 350 வருமானம் வரு கின்றது. தண்டல் காசு கடை வாடகையன்றி பொது மக்கள் பணவிடை மூலமும், அன்பர்கள் மூலமும் நன் கொடைத் தொகையும் சேர்த்து சுமார் ரூ. 3500 வரை செலவு செய்து விழாவைச் சிறந்த முறையில் விழாக் குழுவினர் நடத்தி வருகின்றார்கள். அவர்கள் ஆண்டுக் கொருமுறை தேர்ந்தெடுக்கப்பட்டு தன்னலங் கருதாது தொண்டாற்றி வருகின்றனர்.

பல சமயத்தவர்களும் கடைத்தெருவில் வியாபாரம் செய்துவந்தாலும் சுவாமி காசு என்னும் இத்தண்டலுக்கு மனமுவந்து கொடுத்து அவர்கள் மகிழ்ச்சியுறுவது பெரிதும் பாராட்டுதற்குரியதாகும். விழாவொன்றே சமய வேறுபாட்டைக் களையும் என்பது நம் முன்னோர் கைக்கொண்ட நன்னெறியன்றோ!

விழாவுக்கு ஒரு வாரத்திற்கு முன்னதாகவே கடை வீதிகளிலும், மண்டகப்படி நடக்கும் இடங்களிலும் பந்தல்களமைத்து வண்ணத் தோரணங்களால் அலங் காரம் செய்து இருப்பார்கள். கமுகு, ஈச்சை, பனை,

தென்னங்குலைகள் பந்தலில் கட்டுப்பட்டு காண்போர் மனத்தைக் கவரும் வண்ணம் அமைந்திருக்கும் முன்னர் கூறியதுபோன்று சமய வேறுபாடின்றி ஒவ்வொருவரும் தத்தம் திருவிழாவாகவே கருதி பெரும் பங்கு கொண்டு கடைகளை அலங்காரம் செய்திருப்பார்கள். அவர்கள் கொண்டுள்ள ஒருமைப்பாட்டுள்ளத்தை எதிரொலிப்பதாகவே அச்செயல்கள் நமக்கு அறிவிக்கும்.

விழாவன்று பல்லாயிரக் கணக்கான சுற்றுவட்டார மக்கள் கூடி இறைவனை வழிபட்டுய்ய வந்தவண்ணமிருப்பார்கள் பலவகைக் காவடிகளுடன் காவிரியாற்றிலிருந்து புறப்பட்டு 'முருகா' 'வேல் வேல்' என முழக்கும் வெற்றிக்குரலெழுப்புடன் கூடித் தெருக்களைத் திலுமுள்ள பக்தர்களைப் பரவசமூட்டுவார்கள். காவடிகள் வரும்போதெல்லாம் பெண்கள் தத்தம் வீடுகளிலிருந்து குத்துவிளக்கு ஒளியுடன் வெளிப்போந்து நிறைகுடமுள்ள நீரைக் கொட்டி வணங்குவர். அருள் உள்ளங்கொண்ட அன்பர்கள் மெய்சிலிர்த்துக் கரங்குவித்து வணங்குவார்கள். காவடி யேந்திவரும் அன்பர்களுடன் தொடர்ந்துவரும் அன்பர்குழாங்கள் விண்ணதிரும் ஒலியெழுப்பி விரைவு நடைபோடுவார்கள். இருமருங்கிலும் ஆண்களும் பெண்களுமாக அணிவகுத்து நின்று ஆண்டவனை வழிபடும் காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும்.

மாலை வேளையில் ஒன்பத்துவேலி தண்டாயுதபாணி கோயிலின் முன்பு அமைந்துள்ள மாபெருந் தீக்குழியில் காவடியுடன் வரும் பக்தர்கள் இறங்கி நடந்து சென்று கோயிலுள் நுழைந்து தத்தம் வழிபாட்டு முறையினை முடித்துக்கொள்வார்கள்.

அன்று மதியம் காவிரியாற்று மணலில் வளப்பக் குடி, திரு. இராஜகோபால் முத்துராஜா அவர்களால் அமைக்கப்பட்ட அழகிய பந்தலில் சுவாமி எழுந்தருளி யிருப்பார். அங்கு இரவு 8 மணிக்குமேல் பிரபல நாதசுரக் கச்சேரியும், புகழ்பெற்ற இசைவாணர்களின் இன்னிசைக் கச்சேரியும் முன்பு கூறியதுபோல் நடை பெறும். முதல்நாள் காலை தொடங்கிய சுவாமி புறப் பாடு மறுநாள் காலை கோயிலுக்கு வரும்வரை நடை பெறுகின்றது.

## 19. திருப்பதிகங்கள்

திருஞான சம்பந்தர் அருளிய திருக்காட்டுப்
பள்ளித் தேவாரம்.

திருச்சிற்றம்பலம்.

பண் – கொல்லி] [3-ஆம் திருமுறை

1. வாருமன் னும்முலை மங்கையோர் பங்கினன்
ஊருமன் னும்பலி உண்பதும் வெண்டலை
காருமன் னும்பொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
நீருமன் னுஞ்சடை நிமலர்தம் நீர்மையே.

2. நிருத்தனார் நீள்சடை மதியொடு பாம்பணி
கருத்தனார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
அருத்தனார் அழகமர் மங்கையோர் பாகமாய்ப்
பொருத்தனார் கழலிணை போற்றுதல் பொருளதே

3. பண்ணினார் அருமறை பாடினார் நெற்றியோர்
கண்ணினார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
விண்ணினார் விரிபுனல் மேவினார் சடைமுடி
அண்ணலார் எம்மையா ளுடையஎம் அடிகளே.

4. பணங்கொளு கம்மரைக் காப்பது பல்பலி
யுணங்கலோ டுண்கலன் உறைவது காட்டிடை
கணங்கள்கூ டித்தொழு தேத்துங்காட் டுப்பள்ளி
நிணங்கொள்சூ லப்படை நிமலர்தந் நீர்மையே.

5. வரையுலாஞ் சந்தொடு வந்திழி காவிரிக்
கரையுலா மிடுமணல் சூழ்ந்தகாட் டுப்பள்ளித்
திரையுலாங் கங்கையுந் திங்களும் சூடியங்
கரையுலாங் கோவணத் தடிகள்வே டங்களே.

6. வேதனர் வெண்மழு வேந்தினர் அங்கமுன்
னோதினர் உமையொரு கூறனர் ஒண்குழைக்
காதினர் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
நாதனர் திருவடி நாளுநின் றேத்துமே.

7. மையினர் மிடறனர் மான்மழு வேந்திய
கையினர் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளித்
தையலோர் பாகமாத் தண்மதி சூடிய
ஐயனர் அடிதொழ அல்லல்ஒன் றில்லையே.

8. சிலைதனல் முப்புரஞ் செற்றவன் சீரினர்
மலைதனல் வல்லரக் கன்வலி வாட்டினன்
கலைதனர் புறவணி மல்குகாட் டுப்பள்ளி
தலைதனல் வணங்கிடத் தவமது வாகுமே.

9. செங்கண்மால் திகழ்தரு மலருறை திசைமுகன்
தங்கையாற் றொழுதெழத் தழலுரு வாயினன்
கங்கையார் சடையினன் கருதுகாட் டுப்பள்ளி
அங்கையாற் றொழுமவர்க் கல்லலொ ன்றில்லையே.

10. போதியார் பிண்டியார் என்றவப் பொய்யர்கள்
வாதினல் உரையவை மெய்யல வைகலுங்
காரினர் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
ஏரினல் தொழுதெழ வின்பம்வந் தெய்துமே.

11. பொருபுனல் புடையணி புறவநன் னகர்மன்னன்
அருமறை அவைவல்ல அணிகொள்சம் பந்தன்சொல்
கருமணி மிடற்றினன் கருதுகாட் டுப்பள்ளி
பரவிய தமிழ்சொலப் பறையும்மெய்ப் பாவமே.

திருச்சிற்றம்பலம்.

---

திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்.

பண் - குறுந்தொகை] [ஐந்தாந் திருமுறை

திருச்சிற்றம்பலம்.

1. மாட்டுப் பள்ளி மகிழ்ந்துறை வீர்க்கெலாம்
கேட்டுப் பள்ளிகண் டீர்கெடு வீரிது
ஓட்டுப் பள்ளிவிட் டோட லுறுமுனம்
காட்டுப் பள்ளியு ளான்கழல் சேர்மினே.

2. மாட்டைத் தேடி மகிழ்ந்துநீர் நும்முளே
நாட்டுப் பொய்யெலாம் பேசிடும் நாணிலீர்
கூட்டை விட்டுயிர் போவதன் முன்னமே
காட்டுப் பள்ளியு ளான்கழல் சேர்மினே.

3. தேனை வென்றசொல் லாளொடு செல்வமும்
ஊனை விட்டுயிர் போவதன் முன்னமே
கான வேடர் கருதுங்காட் டுப்பள்ளி
ஞான நாயக னைச்சென்று நண்ணுமே.

4. அருத்த மும்மனை யாளொடு மக்களும்
பொருத்த மில்லைபொல் லாதது போக்கிடும்
கருத்தன் கண்ணுதல் அண்ணல்காட் டுப்பள்ளித்
திருத்தன் சேவடி யைச்சென்று சேர்மினே.

5. சுற்றமு ந்துணை யும்மனை வாழ்க்கையும்
அற்ற போதனை யாரவ ரென்றென்றே
கற்ற வர்கள் கருதுங்காட் டுப்பள்ளிப்
பெற்றம் ஏறும் பிரானடி சேர்மினே.

6. அடும்புங் கொன்றையும் வன்னியும் மத்தமும்
துடும்பல் செய்சடைத் தூமணி சோதியான்
கடம்பன் தாதை கருதுங்காட் டுப்பள்ளி
உடம்பி னூர்க்கோர் உறுதுணை யாகுமே.

7. மெய்யின் மாசுடை யாருடல் மூடுவார்
பொய்யை மெய்யென்று புக்குடன் வீழன்மின்
கையின் மானுடை யான் காட்டுப் பள்ளிஎம்
ஐயன் தன்னடி யேயடைந் துய்ம்மினே.

8. வேலை வென்றகண் ணாரை விரும்பிநீர்
சீலங் கெட்டுத் திகையன்மின் பேதைகாள்
★ காலை யேதொழும் காட்டுப்பள் ளியுறை
நீல கண்டனை நித்தல் நினைமினே.

9. இன்று ளார்நாளை இல்லை யெனும்பொருள்
ஒன்றும் ஓரா துழிதரும் ஊமர்காள்
அன்று வானவர்க் காக விடமுண்ட
கண்ட னூர்காட்டுப் பள்ளிகண் டுய்மினே.

10. எண்ணி லாஅரக் கன்மலை யேந்திட
எண்ணி நீள்முடி பத்தும் இறுத்தவன்
கண்ணு ளார்கரு துங்காட்டுப் பள்ளியை
நண்ணு வாரவர் தம்வினை நாசமே.

---

★காலை சூரியன். சூரியன் இத்தலத்தில் வழிபாடு செய்தகுறிப்பு. ஆண்டில் ஒருநாள் சூரிய ஒளி நேரே சிவலிங்கத்தின்மேல் படுமாறு கோயிலமைப்பு உள்ளது.

## சேக்கிழார் அருளிய திருத்தொண்டர் புராணம்.

"சென்றுதிகழ் திருக்காட்டுப் பள்ளி செஞ்சடை
நம்பர்தம் கோயில் நண்ணி
முன்றில்வலங் கொண்டிறைஞ்சி வீழ்ந்து
மொய்கழற் சேவடி கைதொழுவார்
கன்றணை யாவின் கருத்து வாய்ப்பக் கண்ணுத
லாரை முன்போற்றி செய்து
மன்றுள் நின்றுடல் மனத்துள் வைப்பார்
"வாருமன் னுமுலை" பாடி வாழ்ந்தார்"

(திருஞான சம்பந்தர் புராணம் — 350 — பாடல்.)

திருச்சிற்றம்பலம்.

## 20. பிற பாடல்கள்.

திருவிரட்டை மணிமாலை.

வெண்பா.

சித்துஞ் சடமுமொன்றுய்ச் சேர்த்துடல மாக்கிமதி
வைத்துப் படைத்தவனை வாழ்த்தாமல் - நித்தலுமே
பொன்மண்ணைப் பூவையைப் போற்றினேன் வன்னி
தன்னையே யான்செய் யறம். [வனத்

— உலகநாத ஆச்சாரியார்.

## தீயாடியப்பர் துதி.

### திருத்தாண்டக அமைப்பு.

1. காவிரி நீர் வளம்பெருகு கவினுர் சோலைக்
கழனிநலம் பலமிகுந்த சோழ நாட்டுட்
பாவிரிதே வாரமுடன் பக்தர் பல்லோர்
பைந்தமிழில் வடமொழியிற் பணிந்தே நாளும்
பூவிரிசந் நிதிபோந்தே பாவின் மாலை
பூமாலை புனைந்தேத்த வருள வல்லார்
தேவியழ கம்மையிடப் பாகம் கொண்ட
திருக்காட்டுப் பள்ளித்தீ யாடி யாரே.

2. காயமிது பொய்யென்றே கற்ற மேலோர்
கதறியுரைத் தனவெல்லாம் கற்றும் கேட்டும்
காயமிது மெய்யென்றே நம்பும் பொல்லாக்
கயமைமலி ஞாலத்தீர் நம்மைச் சூழ்ந்த
மாயமது மாற்றிநமை ஆள வல்லார்
மாலயனும் மறைநான்கும் காண ஒண்ணுத்
தேயமிகு பொன்னிவளச் சோழ நாட்டுட்
திருக்காட்டுப் பள்ளித்தீ யாடி யாரே.

3. அடங்காத ஆசையினுல் அவனி முற்றும்
ஆளலாம் என்றலைதிக் கடலுள் மூழ்கும்
கடங்கார்வ மடநெஞ்சே காலை மாலை
கணந்தோறும் மறவாமற் கனிவு பொங்கப்
படங்காணும் அரவணியெம் பெருமான் பாதம்
பரவினுல் மூவுலகும் அருள வல்லார்
திடங்காணநீ தேவியழ கம்மை பங்கன்
திருக்காட்டுப் பள்ளித்தீ யாடி யாரே.

பாலகவி. *முத்து. கோதண்டராமன்,*
அரங்கநாதபுரம்.

---



திருக்காட்டுப்பள்ளி நகரப் பேருராட்சி மன்ற அலுவலகம்.

# வளர்ந்து வரும் நகரம்.

## 1. ஊரின் வளர்ச்சி.

திருக்காட்டுப்பள்ளி காவிரியின் தென்கரையில் அமைந்து வனப்புடன் விளங்குகிறது அறிவிற் சிறந்த சான்றோர் பலரும் இங்கு வாழ்கின்றனர். சுற்று வட்டாரத்திலும் புகழ்பெற்ற பெருங் கவிஞர்கள் பலர் வாழ்ந்து தமிழமுதம் வழங்கியிருக்கின்றார்கள். சான்றாக, இன்றும் சிற்றூர்களில் சங்கச் செய்யுட்களையும், காவியங்களையும் மனனமாகப் பாடும் வல்லுநர் பலர் வாழ்ந்து வருவதைக் காணலாம். இரட்டை மணி மாலை பாடிய திரு. உலகநாத ஆச்சாரியார் இங்கு வாழ்ந்து இருக்கிறார். அவரது குடும்பத்தார் வாழ்ந்து வருகின்றார்கள். செவிவழிச் செய்தியாகப் பலகவிராயர்கள் வந்துபோன கதைகள் பலவும் இன்றும் கேட்டின்புறலாம். அழுத்தமான, தோய்ந்த கல்வியுடையார் சிறந்து வாழ்ந்ததற்கு இவை நமக்கு அறிவுறுத்தும் புறச்சான்றுகளாக அமையும்.

குறிப்பாக இளங்காடு என வழங்கும் இளசைமாநகரில் பெருங் கவிராயராக திரு. முருகையக் கவிராயர் என்ற மூதறிஞர் வாழ்ந்தார். அவர் ஆசுகவியால் அவ் வட்டார மக்கள் அகமகிழும்படி பல பாடல்கள் பாடியிருக்கின்றார். அவற்றினை நம் பகுதி மக்கள் பாடி அகமகிழ்வதை இன்றும் காணலாம். அவருக்கு உறு துணையாக தமிழ் வளர்த்தச் சான்றோர்களாக, அந் நாளில் தமிழ் வளர்த்த மன்னர்களைப் போல அவ்விளசைமா நகரில் நிலக்கிழார்கள் பலர் வாழ்ந்திருக்கின்றனர். அவர்களில் சிறப்பாக ஈண்டு திரு. பாலகோதண்டபாணிச்

சேதிராயர், திரு. கோவிந்தசாமிச் சேதிராயர், திரு. கணபதிச் சேதிராயர் மற்றும் பலரும் குறிப்பிடத் தகுந் தவர்களாவர்.

திருக்காட்டுப்பள்ளியிலும், சுற்று வட்டாரங்களி லும் வடமொழி, தமிழ் மொழியில் சிறந்த மூதறிஞர்கள் பலர் வாழ்ந்தனர். மொழி வல்லுநர்களைப் பேணிப் புரக்கும் வள்ளல்களும் நன்கொடையாளர்களும் பலர் வாழ்ந்திருக்கின்றனர்.

இப்பகுதிவாழ் மக்கள் தெய்வ பக்தியில் சிறந்து விளங்கியதற்குப் பழமையான திருக்கோயில்களே சான்றாக அமையும். அவற்றினை நாளும் போற்றி நல்விழாவெடுக்கும் சிறப்பே பழமையை நினைவூட்டும் பண்பாக அமையும்.

அடுத்து, வரலாற்றில் இடம் பெறத்தக்க நாட்டுப் பற்றில் நாட்டங்கொண்ட பல தொண்டர்கள் வாழ்ந் திருக்கின்றனர். சேவையே தங்கள் வாழ்வின் இன்ப மெனக் கொண்டு நாடு விடுதலை பெறும் நற்றொண்டில் தங்களை ஈடுபடுத்திக்கொண்டு வாழ்ந்தவர் பலர்.

பாரத நாட்டின் பெருந் தலைவர்கள் பலர் இவ் வூருக்கு வருகை புரிந்துள்ளார்கள். குறிப்பாக, டாக்டர் பாபு இராஜேந்திர பிரசாத், பாரத இரத்தினம் பண்டித ஜவகர்லால் நேரு, திரு. சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார், திருமதி அருணா ஆசப்அலி அம்மையார், அகில இந்திய காங்கிரஸ் தலைவர் திரு. காமராஜ் ஆகியோராவர்.

இவ்வூருக்கு சமய வளர்ச்சியே பெருநோக்கமாகக் கொண்ட சமயத் தலைவர்களென அழைக்கப்படும்

மடாதிபதிகள் பலரும் வருகை புரிந்துள்ளார்கள். குடந்தை மாநகரில் இருந்து சமயத்தைப் பாவைப் பாடல்கள் மூலம் பச்சிளங்குழந்தைகள் உள்ளத்திலும் பதியவைக்கும் பான்மையுடன் பல கோடிப் பக்தர்களைப் பரவசமூட்டிவரும் ஸ்ரீலஸ்ரீ **சங்கராச்சாரிய சுவாமிகள்** அவர்கள் பலமுறை வருகை புரிந்துள்ளார்கள்.

மதுரையம்பதியில் சமயப் போரில் வாகை சூடிய திருஞானசம்பந்த பெருமான் திருமடத்தின் ஆதீன கர்த்தராக விளங்கும் ஸ்ரீலஸ்ரீ **சோமசுந்தர பரமாச்சாரிய சுவாமிகள்** அவர்கள் கோயிலுக்கு எழுந்தருளி சொற்பொழிவாற்றி அருள்புரிந்துள்ளார்கள்.

தமிழும் சைவமும் தமிழகத்து மட்டுமல்லாமல் வட இந்தியாவிலும், பிறநாடுகளிலும் வளரத்தமது நல்லாற்றலாம் சொல்லாற்றலால் கேட்போர் வியக்கும் வண்ணம் பட்டி தொட்டிகளிலும், பட்டி மன்றங்களிலும் தமிழ் முழக்கம் செய்துவரும் அருள்நெறித் திருக்கூட்டத் தலைவர் **தவத்திரு. குன்றக்குடி அடிகளார்** அவர்களும் பலமுறை இவண் வருகை புரிந்து சிறப்பித்துள்ளார்கள்.

தமிழகத்தின் சொற் கொண்டலாக விளங்கும் சைவத்திரு. **கிருபானந்த வாரியார், பித்துக்குளி முருகதாஸ்** அனைவரும் வருகை தந்துள்ளார்கள். கலைஞர்கள், நடிகர்கள், பாடகர்கள் யாவரும் வந்து சிறப்புற்றிருக்கிறார்கள்.

அத்துடன் இவ்வூருக்கு அமைந்த சிறப்பிலொன்று கருவில் திருவுடையோராகப் பிறந்து நல்லெண்ணத்துடன் வாழ்ந்து சிறந்த சர். பி. எஸ். சிவசாமி ஐயர் அவர்கள் அன்புடனளித்த அறக்கோயில் பணியாகும்.

ஊருக்குள் நுழைபவர்களை அகமும் முகமும் மலர வரவேற்கும் கலைக்கோயில் உள்ளது. அவர் தமக்கென் வாழாது பிறர்க்கென வாழ்ந்த பெருந்தகையாவார்.

## 2. அமைப்பும் – வனப்பும்.

இவ்வூர் இரு அயனக்கோடுகளுக்கிடையே 11 பாகை வட அட்சத்திலிருப்பதால் ஆண்டிற்கு இரு முறை சூரியன் இங்கு தலைக்கு நேராக வரும். அந் நாட்கள் ஆகஸ்டு மாதம் 10ம், மே மாதம் 3 ஆம் தேதியுமாகும். இவற்றுள் மே மாதத்தைக் கடும் கோடை யென்கிறோம். ஆகஸ்டு மாதத்தைக் கோடை யெனச் சொல்வதில்லை. ஏனெனில் அப்பருவத்தில் மேற்கிலுள்ள அரபிக்கடலிலிருந்து நீராவி நிரம்பியிருக்கும் தென் மேற்குப் பருவக்காற்று வீசி வெப்பத்தைக் குறைக் கிறது.

இவ்வூர் தஞ்சை வட்டத்தில் பூதலூர் கூட்டு மன்றப் பிரிவில் சேர்ந்ததாகும். கும்பகோணம் பாராளுமன்றத் தொகுதியிலும், திருவையாறு சட்ட மன்றத் தொகுதியிலும் சேர்க்கப்பட்டுள்ளன. பல பஞ்சாயத்துக்கள் இக்கூட்டு மன்றத்தில் இணைந்ததாக இருந்தபோதிலும் நகரப்பஞ்சாயத்து என்னும் பெருநிலை யுற்ற இவ்வூர் ஒன்றே பெரியதாகும். திருக்காட்டுப் பள்ளி பஞ்சாயத்தின் மக்கள் தொகை (1961இல் எடுத்த கணக்குப்படி) 8044 ஆகும். பஞ்சாயத்தின் பரப்பளவு 2½ சதுர மைலாகும். பல இனத்தவரும் இப் பகுதியில் வாழ்ந்து வருகிறார்கள்.

## 3. நகரப் பஞ்சாயத்து மன்றம்.

திருக்காட்டுப்பள்ளி நகரப் பஞ்சாயத்து 1-4-1914 ஆம் ஆண்டு தொடங்கியிருக்கிறது. குறைந்த உறுப்பினர்களைக் கொண்டு சிறு பஞ்சாயத்து மன்றமாகத் தொடங்கிய இது நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ச்சிபெற்று வந்துள்ளது.

பஞ்சாயத்தின் மக்கள் தொகை 8044. பரப்பளவு 2½ சதுர மைல். இப் பஞ்சாயத்தில் திருக்காட்டுப்பள்ளி ஒன்பத்துவேலி, புதுச்சத்திரம், கூடநாணல் ஆகிய சிற்றூர்களும் இணைக்கப்பட்டுள்ளன. இப்பஞ்சாயத்தில் வரையறுக்கப்பட்டுள்ள தொகுதிகள் (வார்டுகள்) பதின்மூன்று. பெண் உறுப்பினர் உட்பட பதினான்கு பேர்களில் தற்போது 12 உறுப்பினர்களே இருந்து வருகின்றார்கள்.

மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் ஊராட்சி மன்ற வளர்ச்சியில் நாட்டங்கொண்டு செயலாற்றி வருகின்றார்கள். அவர்களது பெயர்ப் பட்டியல் பின்வருமாறு:-

| | | |
|---|---|---|
| திரு. | T. M. தங்கவேலு நாட்டார் அவர்கள் | —தலைவர் |
| ,, | S. சுந்தரராஜ நாட்டார் | ,, துணைத்தலைவர் |
| ,, | கோ. பெரியசாமி அங்கராயர் | ,, உறுப்பினர் |
| ,, | R. N. அருணாசலஞ்செட்டியார் | ,, ,, |
| ,, | ச. குழந்தை வேலன் | ,, ,, |
| ,, | K. பீமராவ் | ,, ,, |
| ,, | R. ஜானகிராமன் | ,, ,, |
| ,, | O. S. பாலையா | ,, ,, |
| ,, | C. நாராயணசாமி | ,, ,, |
| ,, | A. தண்டாயுதபாணி | ,, ,, |
| ,, | N. இராஜாங்கம் நாட்டார் | ,, ,, |
| ,, | திருமதி S. மரகதம் | ,, ,, |

நகரப்பஞ்சாயத்து மன்றத்தின் ஆட்சிப் பொறுப் பினைச் சிறந்த முறையில் ஏற்றுப்பணிபுரியும் பணியாளர் கள் அனைவரும் பாராட்டத்தக்கவர்களாவர். மன்ற வளர்ச்சியில் பெரும் பங்கு கொண்டு பேரூக்கங்காட்டி வருகின்றார்கள்.

திரு. T. சக்கரவர்த்தி அவர்கள் நிர்வாக அதிகாரி யாகவும், திரு. K. சண்முகம், S. T. சம்பந்தம், V. ஜானகிராமன், கோ. பத்மனாபன், கோ. பாலதண்டா யுதபாணி ஆகியோர் முறையே எழுத்தர்களாகவும், திரு. K. நாராயணசாமி, S. அரங்கராஜ் இருவரும் தண்டலர் களாகவும் மற்றும் எழுவர் மின்விளக்கு, குழாய்க்கிணறு பழுது பார்த்தல், துப்புரவு, கொசு ஒழிப்பு, புறப்பணி அலுவலர்களாகவும் சிறந்த முறையில் பணியாற்றி வருகின்றார்கள்.

அடுத்து, நகரத்தூய்மை செய்யும் பெரும்பணியி லீடுபட்டுள்ள பொதுநலச் சிப்பந்திகள் இருபத்தொரு வரும் ஈண்டு சிறப்பாகப் போற்றப்படவேண்டியவா களாவார்கள்.

**வருமானம்**

பஞ்சாயத்துக்குச் சொந்தமான வாரச்சந்தை மூலம் ஆண்டு ரூ. 15,690 கட்டடத்தாலான தினசரிச்சந்தை யின் மூலம் ஆண்டு வருமானம் ரூ. 3,243 வாழைப்பழம் பழுக்கவைக்கும் கூடாரம் ஒன்றின் ஆண்டு வருமானம் ரூ. 2,170. பலன்தரும் பழமரங்கள் மூலம் ஆண்டு வருமானம் ரூ. 1.352 ஆகிய பல இனங்களினுல் வரு மானம் பெருகி வருகின்றது. சான்றாக கடந்த காலப் பட்டியலைக் கொண்டு நாம் கணித்தறியலாம்.

| | | |
|---|---|---|
| 1963-64 ஆண்டு | வருமானம் | ரூ. 82,713 |
| 1964-65 | ,, | ரூ. 72,189 |
| 1965-66 | ,, | ரூ. 84,548 |

தெருக்களில் மின்விளக்குகள் பல வகைகளில். நீலரச விளக்குகள் 9ம், மின்குழாய் விளக்குகள் 87ம், 200 வாட்ஸ் விளக்குகள் 3ம், இதர 40, 60, 150 வாட்ஸ் விளக்குகள் 198ம் ஆக மொத்தம் 297 விளக்குகள் நன்முறையில் அமைக்கப் பெற்றுள்ளன.

மக்கள் தொலைவிலிருந்தும் காலமறிந்து செயலாற்ற மின்சார சங்கு ஒன்று இயங்கி வருகின்றது. அத்துடன் கடைத்தெருவில் காலங்காட்டும் கருவி (Clock Tower) ஒன்றும், மகாத்மா காந்தியடிகளின் மணிமண்டபம் ஒன்றும் அமைக்கப்பெற்றுள்ளன. பொதுநலம் பேணும் வகையில் மின்சாரத்தால் இயங்கும் தண்ணீர்க் குழாய் அமைப்புக்களும், மலங்கழிப்பிடம், சிறுநீர்க் கழிப்பிடம் ஆகியவைகளும் அமைக்கப்பெற்றுள்ளன. சுமார் 70 ஆயிரம் ரூபாய் மொத்த மதிப்பீட்டில் அக்னி தீர்த்தம இருந்த இடத்தில் பேருந்து நிலையமொன்று நிறுவக் கட்டட வேலை தொடங்கி நடைபெற்றுக்கொண்டு வருகிறது. விரைவில் செயல்பட இருக்கின்றது.

## 4. கலைக்கோயில்கள்.

### 1. சர். பி. சிவசாமி ஐயர் உயர்நிலைப்பள்ளி.

இவ்வட்டாரத்தில் உயர்நிலைப்பள்ளி இல்லாத குறையைப் போக்கி நிறைவு செய்தவர் பழமார்நேரி திரு. சர் பி. எஸ். ஐயர் அவர்கள் ஆவார்கள். தன்னல மற்ற தகைமையாளர்களில் ஒருவர்: ஈத்துவக்கும் இன்பங் கண்ட பெருமகன் : அழியாச் செல்வமீந்த அறநெறி அண்ணல் என்று அவரை எவ்வாறு போற்றினும் தகும்.

1916இல் அவர்களின் பெருமுயற்சியால் நிறுவப்பட்ட இவ்வுயர்பள்ளி பலவித கிளைப் பள்ளிகளாய்த் தழைத்து, செழித்து நல்ல பலன் தந்து வருவதைக் காணுகின்றோம். சென்ற ஆண்டு வைரவிழாவைக் கொண்டாடி அதன் நினைவாக மகளிர் உயர்பள்ளி தொடங்கி அதுவும் மாண்புற விளங்குகிறதென்றால் அது ஒன்றே அப்பெருமகனாரின் தூய அறச்செயலுக்கு ஏற்ற சான்றாக அமையும்.

இப்பள்ளியைப் பொறுப்பேற்று நடத்திவரும் நிர்வாகிகளும், தகைமைசான்ற தலைமையாசிரியர்களும், கடமையே உடைமையாகக் கொண்டுள்ள ஆசிரியப் பெருந்தகையாளர்களும் பெரிதும் போற்றுதற்குரியவர்களாவார்கள். இப்பள்ளி, இதன இணையாக விளங்கும் மகளிர் உயர்பள்ளி, சிவசாமிபுரம் உயர்தொடக்கப் பள்ளி, சிவசாமிபுரவிவசாயப்பண்ணை, காவிரிகோகுலம், கல்யாணி இல்லம் என்னும் விடுதி அனைத்தும் சர்.பி.எஸ், அறக்கட்டளைக் குழுவின் பொறுப்புக்களேயாகும்.. இப்பள்ளியைத் தருதிமிக்கத் தலைமையாசிரியர்களான திரு A. சுந்தரலிங்கம ஐயர், திரு. V. குருசாமி சாஸ்திரிகள், திரு N. கலியாணராம ஐயர், திரு. S. R, பாலசுப்பிரமணிய ஐயர், திரு. M. R. சுப்பராமன், திரு O. R. முத்துசாமி ஐயர் ஆகியவர்கள் நன்முறையில் நடத்தி வந்துள்ளார்கள்.

தற்போது தலைமையாசிரியராகப் பணிபுரிந்து வருகின்றவர்கள் திரு. P. K. நாராயணன் M. A., B. T., ஆவார்கள். சுமார் 27 மேல். கீழ் வகுப்பு ஆசிரியர்களும், 8 தமிழாசிரியர்களும். 12 இதர பாடப்பிரிவு ஆசிரியர்களும் சிறந்த முறையில் பணியாற்றி வருகின்றார்கள்.



சர். சிவசாமி ஐயர் உயர்நிலைப்பள்ளியைச் சார்ந்த கல்யாணி விடுதியின் கவின்மிகு தோற்றம்.

இதன் சார்பாக நடைபெற்று வரும் கல்யாணி விடுதியில் 110 மாணவர்கள் பிற மாநிலங்களிலிருந்தும் வந்து தங்கிப் படித்துப் பயன்பெற்று வருகின்றார்கள். இப் பள்ளியில் 1600 மாணவர்கள் படித்து வருகின்றார்கள்.

மகளிர் உயர்பள்ளியில் திருமதி. S.ஜெயம்,B.A.,B.T. அவர்கள் தலைமையில் மேல், கீழ் வகுப்புகட்கு 10 ஆசிரியைகளும், 3 தமிழாசிரியைகளும், பிற பாட ஆசிரியைகளாக ஐவருமாக 19 பேர் நற்பணியாற்றி வருகின்றார்கள். 21-8-1965இல் தான் தொடங்கப் பெற்ற பள்ளியானாலும் விரைவில் வளர்ச்சிபெற்றுச் சிறந்த முறையில் செயலாற்றி வருகின்றது. இவ்வாண்டு 469 மாணவியர் படித்து வருகின்றார்கள்.

இம்மகளிர் பள்ளி நாளும் வளர்ந்து நற்புகழெய்தும் என்பதற்கு அடையாளமாக நன்கொடையருளியுள்ள பெருந்தகையாளரை ஈண்டு குறிப்பிடுவது சாலப் பொருத்தமேயாகும். பூதராயநல்லூர் திரு. தங்கவேலு உலகுடையார் அவர்கள் தாமே மனமுவந்து பதினாயிரம் ரூபாய் மதிப்புடைய தமது நிலங்களைப் புதிய மகளிர் பள்ளியின் கட்டட நிதிக்கு நன்கொடை அளித்துள்ளார். அவர்தம் அருஞ்செயல் போற்றத்தக்கதும், ஏனையோர் பின்பற்றத்தக்கதுமாகும்.

சிவசாமிபுர விவசாயப்பண்ணை : சிறந்த செயல் முறை அடிப்படையில் விவசாய பாடத்தை மாணவர்கள் கற்றுணர இப்பண்ணை 32 ஏக்கர் பரப்பளவுடன் சிறந்து விளங்குகின்றது. இதில் ஒரு பிரிவாகக் காவிரியின் வடகரையில் 9 ஏக்கர் பரப்பளவுள்ள பண்ணை ஒன்றும் நடைபெற்று வருகின்றது. கல்யாணி விடுதிக்கு

வேண்டிய உணவுப் பொருள்கள் யாவும் இவற்றின் மூலம் தட்டின்றிக் கிடைக்கின்றன. மேலும் சிவசாமி புரத்தில் உயர்தொடக்கப்பள்ளியொன்றில் 95 மாணவர் களைக்கொண்டு தலைமையாசிரியர் உள்பட மூவர் பணியாற்றி வருகின்றனர். காவேரி கோகுலம்: கல்யாணி விடுதிக்கு அருகிலேயே காவிரி கோகுலம் பாற்பண்ணை நடத்தப்படுகிறது.

திரு. சர். பி சிவசாமி ஐயரவர்கள் அறச்சாலை நிறுவியதுடன் திருக்காட்டுப்பள்ளியில் மகப்பேறில்ல மொன்றும் தமது தாயார் சுப்புலெட்சுமி அம்மாளின் நினைவாகக்கட்டியுள்ளார். இது அரசினர் மேற்பார்வை யில் சிறந்த முறையில் நடைபெற்று வருகின்றது.

அவரால் நிறுவப்பட்ட உயர்நிலைப்பள்ளியானது நாளும் வளர்ந்து ஆயிரமாயிரம் மாணவ மணிகளை அறிவுபெறச்செய்து 1956இல் பொன் விழாவையும், 1964இல் நிறுவனரின் நூற்றாண்டு விழாவையும், 1965ல் பள்ளி வைரவிழாவையும் கொண்டாடி அதன் நினைவாக மகளிர் உயர்நிலைப்பள்ளியையும் தோற்றுவித்திருக் கிறது. அறிவுசான்ற பெரியோர்களால் நிர்வகிக்கப் படும் இந்நிறுவனங்கள் நாளும் வளர்ந்து நாட்டுக்கும் மொழிக்கும் நற்றொண்டு புரிந்து சிறப்புறுமாக!

### 2. கூட்டுமன்ற உயர்தொடக்கப்பள்ளி.

இப்பள்ளி சுமார் 60 ஆண்டுகட்கு முன் தாலுகா போர்டு நிர்வாகத்தினரால் ஆரம்பப்பள்ளியாகத் தொடங்கப்பெற்று பின்னர் உயர்தொடக்கப்பள்ளியாகி மாவட்ட மன்ற ஆட்சிப்பொறுப்பிலிருந்து, தற்போது பூதலூர் கூட்டுமன்றத்தினரால் நிர்வகிக்கப்பட்டு

வருகின்றது. மாவட்ட மன்றப் பொறுப்பிலிருந்தே இம் மாவட்டத்தில் அதிக மாணவ மாணவிகளையும் ஆசிரியர்களையுங் கொண்ட முதல்தரப் பள்ளியாக விளங்கி வருகின்றது.

தகுதியும் சிறப்புமிக்க தலைமையாசிரியர்கள் பலர் இப்பள்ளியின் வளர்ச்சியில் நாட்டங்கொண்டு உழைத்து வந்திருக்கின்றனர். அப்பள்ளியில் முன்னாள் பணியாற்றிய தலைமையாசிரியர் திரு. L.V. கிருஷ்ணராவ், R. முத்துசாமிப் பிள்ளை, M. S. தியாகராஜ பிள்ளை, P. சாமுவேல் மதுரம், V. G. கலியபெருமான் நாயுடு, T. M. இராஜகோபால் நாயுடு, A. இக்னேஷியஸ், K. நரசிம்மன் ஆகியோர் குறிப்பிடத்தக்கராவார்கள்.

இதுபோது, இப்பள்ளியிலேயே துணையாசிரியராக இருந்தும், சாரணப் பயிற்சியிலும் சமயப் பண்பாட்டிலும், சிறந்த திரு. A. இக்னேஷியஸ் அவர்கள் தலைமையாசிரியராகப் பணிபுரிந்து வருகின்றார்கள். இப்பள்ளியில் சுமார் 36 ஆசிரியர்கள் உள்ளனர். ஆண்கள் 775 பெண்கள் 567 ஆக 1342 பேர் நன்முறைக் கல்வி கற்று வருகின்றார்கள். இங்குநகரப் பஞ்சாயத்துச் சிறு தொகையுடன் நாள்தோறும் 150 மாணவ மாணவியர் கட்குப் பகலுணவு அளிக்கப்படுகின்றது.

1 முதல் 8 வகுப்புக்கள் உள்ளன. உயர்தொடக்கப்பள்ளியாயினும் தமிழ்ப்பாடம் பயில்விக்கத் தமிழாசிரியர் நியமனம் செய்திருப்பது போற்றுதற்குரியதாகும். இங்கே பணியாற்றும் ஆசிரியர்களனைவரும் நன்முறைப் பயிற்சி மிக்காராய் இருத்தலால் தான் இப்பள்ளி நாளும் நன்முறையில் சிறந்து விளங்கி வருகின்றது. இப்பள்ளி நாளும் வளர்ந்தோங்க இறைவன் திருவருள் புரிவாராக!

**3. கோபால விலாஸ் உதவிபெறும் தொடக்கப்பள்ளி**

இந்நகரப் பஞ்சாயத்து எல்லைக்குட்பட்ட புதுச் சத்திரத்தில் ஸ்ரீ வேணுகோபால சுவாமி கோயிலுக் கருகில் உள்ள கட்டடத்தில் நடைபெற்று வருகிறது. தாராள சிந்தையும், பெருங் குணமும் படைத்தவரான திரு. P. R. கோவிந்தசாமி ஐயரவர்கள் இப்பள்ளியின் தாளாளராக இருந்து சிறந்த முறையில் நடத்திவருகின் றார். அவரது குமாரர் திரு. G. சுப்பையா தலைமை யாசிரியராகவும், திரு. இருதயசாமி, ஜெயராமன் ஆகியோர் (மூவர்) ஆசிரியர்களாகவும் பணியாற்றி வருகின்றார்கள். பாரதியின் பாடலுக்கிணங்க ஆணும் பெண்ணும் சரிநிகர் சமானமாக 63+63=126 பேர் கல்வி கற்று வருகின்றார்கள். நகரப் பஞ்சாயத்து உதவித்தொகையுடன் இப்பள்ளியில் 40 பேர் மதிய உணவு உதவி பெற்று வருகின்றார்கள். பொதுமக்கள் ஆதரவுடன் பள்ளி மேலும் வளர்ச்சியுற்று, நாளும் வளர்ந்தோங்க இறைவன் அருள் புரிவாராக!

**4. கூட்டு மன்றத் தொடக்கப்பள்ளி:**

பஞ்சாயத்துக்குட்பட்ட கூடநாணல் கிராமத்தில் பூதலூர் செல்லும் நெடுஞ்சாலையினருகே நல்ல முறையில் இப்பள்ளி கட்டப்பெற்றுள்ளது. 1 முதல் ஐந்து வகுப்புக்கள் நடைபெறுகின்றன. திரு. அரங்க ராசன் அவர்கள் தலைமையாசிரியராகவும், திரு. T. S. இராஜப்பா சோழங்கத் தேவர், திருமதி. G. இலக்குமி காந்தம் ஆகிய மூவர் ஆசிரியர்களாகவும் சிறந்த முறை யில் பணியாற்றி வருகின்றார்கள். சுற்று வட்டாரங்களில் மிக அண்மையில் பள்ளிகள் இருந்தபோதிலும் ஆசிரியர் களது பெருமுயற்சியால் இப்பள்ளியில் 69 மாணவரும்,

45 மாணவிகளுமாக 114 பேர் கல்வி கற்று வருகின்ருர்கள். நகரப் பஞ்சாயத்தார் சிறு தொகை உதவியுடன் 36 பேர் மதிய உணவுத் திட்டத்தால் நலம் பெற்று வருகின்ருர்கள். இப்பள்ளி பல்வளங்களும் பெற்றுயர திருவருள் முன்னிற்குமாக!

## 5. நகரப் பஞ்சாயத்து எல்லேக்குள் இயங்கி வரும் அலுவலகங்கள்.

1 ஆவணக்களரி நிலேயம்.
2 அரசினர் மருத்துவ மனே—சுப்புலெட்சுமி தாய்சேய் நலவிடுதி.
3 அஞ்சல் நிலேயம் தொலேபேசி தந்தி வசதியுடன்
  ,, கிழக்கு – கிளே.
4 பெருவழித்துறை பிரிவு அலுவலகம்.
5 காவல் நிலேயம்.
6 பள்ளித் தணிக்கை துணே ஆய்வர் அலுவலகம்.
7 காவிரிப் பொதுப் பணித்துறை அலுவலகம்.
8 கூட்டுறவு மத்திய வங்கிக் கிளே.
9 தஞ்சாவூர் நிரந்தர வங்கிக் கிளே.
10 கும்பகோணம் வங்கிக் கிளே.
11 இலட்சுமி விலாஸ் வங்கி.
12 கொள்ளிடம் பிரிவு அலுவலகம்.
13 கூட்டுறவு மார்க்கெட்டிங் பெடரேஷன்.
14 மாவட்டக் கிளே நூலகம்.
15 அரசினர் கதர் விற்பனே நிலேயம்.
16 கோவாப் டெக்ஸ் ,,
17 பூதலூர் ஒன்றிப்பு கொல்லு தச்சு பட்டறை.
18 திருச்சி-தென் சென்னே மின்வழங்குக் கூட்டுக் கழகம்.
19 கால்நடை மருத்துவ மனே.

## 6. மருத்துவ மனைகள்.

அரசினர் மருத்துவ மனையும், சுப்புலெட்சுமியம்மாள் தாய்சேய் நல விடுதியும் நல்ல முறையில் இயங்கி வருகின்றன. சுற்றுவட்டார மக்களுக்கு இவைபெரும் பயனை அளித்து வருகின்றன.

பயிர்த் தொழிலையே உயிர்த் தொழிலாகக்கொண்ட விவசாயிகளுக்குக் கால்நடை வளர்ச்சிபெற இவ்வூரில் மருத்துவ மனை காவிரியாற்றின் வடகரையில் கட்டப் பட்டு 7—9—1966 முதல் இயங்கி வருகின்றது. இம் மருத்துவ மனைக்குப் புதுச் சத்திரம் ஸ்ரீ வேணுகோபால சுவாமி ஆலயத்தின் பரம்பரை அறங்காவலரான திரு. R. V. கோதண்டராம நாயுடு அவர்கள் மன முவந்து 1 ஏக்கர் 8 செண்டு நிலத்தை அளித்துள்ளார் கள். அவர்களது வள்ளண்மை பெரிதும் பாராட்டு தற்குரியது.



காவிரி, குடமுருட்டி ஆற்றுப்பாலம்.

## 7. மாணவர் உண்டுறை விடுதி.

அரசினரால் அரிசன நல விடுதியொன்று இவ்வூரில் நடத்தப்பெற்று வருகிறது. அதனைக் கோயில் அரங்காவலர்களி லொருவரான திரு. O. M. அண்ணாமலை அவர்கள் நல்ல முறையில் நடத்தி வருகின்றார். இவ்வுண்டுறை விடுதியில் தாழ்த்தப்பட்டவர்கள் 57, பின் தங்கிய வகுப்பினர் 22 பேர்களுமாக 79 மாணவர்கள் நற்பயனடைந்து வருகின்றார்கள். இவ்விடுதிக்கு ஆண்டொன்றுக்கு சுமார் 14 ஆயிரத்துக்குமேல் உதவித் தொகை கிடைத்து வருகின்றது.

## 8. மகிழ்வுப் பொழுதுபோக்கு இல்லங்கள்

நகரப் பஞ்சாயத்தாரால் நடத்தப்படும் படிப்பகமும் நூலகமும் உள்ளன. அத்துடன் அரசினரால் நடத்தப்பெறும் நூலகம் ஒன்றும் உள்ளது. மாணவர்கள் தத்தம் ஓய்வு நேரங்களில் அங்கே சென்று படித்துப் பயன் பெறுகின்றனர்.

மக்கள் பொழுது போக்கிற்காக மாலா திரைப்பட அரங்கம் ஒன்றும் உள்ளது. நகரப் பஞ்சாயத்தார் நடத்தும் குழந்தைகள் பூங்கா மூன்றுஉள்ளன. இங்கே காலை மாலை வேளைகளில் குழந்தைகள் ஓடியாடி விளையாடி உடல் நலம் பெறுகின்றனர்.

## இனி வேண்டுவன:

1. பல வளங்களும் ஒருங்கமைந்துவளர்ச்சியுற்று வரும் இந் நகருக்குக் கலைக் கல்லூரி யொன்றுவேண்டுவது இன்றியமையாத தொன்றாகும். பணமும் குண

மும் மிக்கோர் முயன்ருல் விரைவில் அவ்வெண்ணம் கைகூடுமென்பதில் ஐயமில்லை.

2. பழுதுற்று வரும் பெரிய கோயில் இராஜகோபுரத்தைத் திருப்பணிக் குழுவினர் வேண்டிய வண்ணம் சிவநேயச் செல்வர்கள் அனைவரும் தாராளமாக நன்கொடையளித்துச் செப்பஞ் செய்து, சிவனருள் பெற்று வாழ வேண்டுகின்றனம்.

தென்னாடுடைய சிவனே போற்றி!
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி!

திருச்சிற்றம்பலம்.



# மண்டகப்படியார்ள் பட்டியல்

| நாள். | விழா. | பெயர். |
|---|---|---|
| 1 | கொடியேற்று விழா: | திரு. T. S. துர்காஜலம் பிள்ளை அவர்கள், திருவையாறு. |
| 2 | சூரிய வாகனம்: | ,, த். இராமையா நாட்டார் அவர்கள் |
| | | ,, தங்கராசு நாட்டார் அவர்கள், பிரமன்பேட்டை. |
| 3 | பூதவாகனம்: | ,, தி. மு. சாரங்கபாணி செட்டியார் அவர்கள் தி. கா. பள்ளி. |
| 4 | அன்னவாகனம்: | ,, L. B. இராதாகிருஷ்ணன் செட்டியார் அவர்கள், லால்குடி. |
| 5 | இடபவாகனம் | ,, சி. சண்முக உடையார் அவர்கள் |
| | | ,, சி. நடராஜ உடையார் அவர்கள் |
| | | ,, ரா. பிச்சை உடையார் அவர்கள் |
| | | ,, வீ. ஆறுமுக உடையார் அவர்கள், களர்பட்டி. |
| 6 | யானை வாகனம்: | ,, R. பாலசுப்பிரமணிய கட்டவட்டியார் அவர்கள். |
| | | ,, ஆ. கோ. நல்லபெருமாள் நாட்டரையர் அவர்கள். |
| | | ,, வ. பிச்சை கட்டவட்டியார் அவர்கள், தி. கா. பள்ளி. |
| 7 | பூந்தேர்: | ,, (லேட்) தெ. சிங்காரவேலு சென்னண்டார் அவர்கள் குமாரர்கள், தி. கா. பள்ளி. |
| 8 | குதிரை வாகனம்: | ,, T. R. பொன்னுச்சாமி பிள்ளை அவர்கள், தி. கா. பள்ளி. |
| 9 | தேர் ஓட்டம்: | ,, நா. பாலுசாமி செட்டியார் அவர்கள், தி. கா. பள்ளி. |
| 10 | தீர்த்தவாரி: | ,, கடைவீதி வர்த்தகர்களும் சிவநேயச் செல்வர்களும். |
| 11 | விடையாற்றி: | ,, மளிகை வர்த்தகர்கள் சங்கம். திருக்காட்டுப்பள்ளி. |



அழகமர் நாயகி கோயில் கோபுரத் தோற்றம்.